அதிக
மலர்ச்சியைத்தருவது..

# ஹிமாலயா புக்கே

டாய்லட், டால்கம் பௌடர்களின்

## குளுமையான பரிமளம்

நேர்த்தியான ஹிமாலயா புக்கே பௌடர்கள் உங்கள் அழகு பராமரிப்பிற்கு உத்தமமானவை. அவை வேர்வையை உறிஞ்சுகின்றன. சருமத்திற்கு குளுமையும் ஆறுதலும் அளிக்கின்றன. அவைகளின் மனதை மயக்கும் பரிமளம் வெகுநேரம் நீடித்திருக்கிறது.




HBP. 2-172-55 TM

தயாரிப்புகள்

லண்டனுக்காக இந்தியாவில் தயாரிக்கப்பட்டவை

பிப்ரவரி

2 முதல்

சென்னை

பிரபாத்

சித்ரா

ராஜகுமாரி

மற்றும் எல்லா முக்கிய நகரங்களிலும்

ஜுபிடரின்

# மர்மயோகி



கதை, வசனம் -
ஏ.எஸ்.ஏ.சாமி

டைரக்ஷன் -
கே.ராம்நாத்

# புது வருஷத்திய புதிய விற்பனை !

(பிளாஸ்டிக் ஸ்டராப் உபயோகிப்பதன் மூலம் ஏற்படும் கெடுதல்களை முன்னிட்டு) முன்பு இருந்த பழைய விலையிலேயே விற்கப்படும் கடிகாரங்கள் ஒவ்வொன்றுடனும் ஒரு நவீன கடிகாரத்திற் கேற்றபடி அட்ஜஸ்ட் செய்யும் ஸ்டெயின்லெஸ் ஸ்டீல், க்ரோமியம் அல்லது ரோல்டு கோல்டு செயினும் இலவசமாக அளிக்கப்படும். 5, 7 ஜுவல் பதித்த ஸ்விஸ் கடிகாரங்கள் நான்கு வருஷங்களுக்கும் 15, 17 ஜுவல் பதித்த ஸ்விஸ் கடிகாரங்கள் 7 வருஷ திருப்திகரமான உழைப்பிற்கும் உத்தரவாத முள்ளவை. அழகிய வெல்வெட் பெட்டியில் உத்தரவாத சர்ட்டிபிகேட்டுடன் சப்ளை செய்யப்படும். தபால் செலவு, பாக்கிங், விற்பனை வரி இலவசம்.




## இனாம்

இரண்டு கடிகாரங்களுக்கு ஒரு கவர்ச்சியுள்ள டயரியுடன் பேனா பென்ஸில் செட்டும். மூன்று கடிகாரங்களுக்கு ஒரு அதிர்ச்சி தாக்காத ரயில்வே டயம் பீஸும், ரோல்டு கோல்டு செயினுடன் நல்ல ரேடியம் டயல் ரோல்டு கோல்டு பாக்கெட் வாட்சும் இனாம். நான்கு கடிகாரங்களுக்கு ஒரு அழகிய டபிள் க்ரோமியம் சதுர வடிவ டேபிள் கடிகாரமோ அல்லது ரேடியம் டயலுடன் கூடிய ஸ்விஸ் டிராவலிங் அலாரம் டைம்பீஸோ அளிக்கப்படும். ஒரு நவீன 1951 பிளாஸ்டிக் காலண்டர் ஒவ்வொரு கடிகாரத்துடன் இலவசம்.



ரவுண்டு சென்டர் செகண்ட்
மாற்றியமைக்கக்கூடிய செயினுடன் (சைஸ் 10½)

| கேட்லாக் நெ. | | ஜுவல்ஸ் | விலை |
|---|---|---|---|
| 601 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | ஜுவல்ஸ் | 24 |
| 602 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | '' | 27 |
| 605 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 7 | 44 |
| 672 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 15 | 50 |
| 673 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 55 |
| 676 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 17 | 70 |



ரவுண்டு சிறிய வடிவம்
மாற்றியமைக்கக்கூடிய செயினுடன் (சைஸ் 8½)

| கேட்லாக் நெ. | | ஜுவல்ஸ் | விலை |
|---|---|---|---|
| 613 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 5 | 28 |
| 614 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 5 | 31 |
| 615 | முழு ரோல்டுகோல்டு கேஸ் | 5 | 33 |
| 616 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 7 | 33 |
| 617 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 7 | 37 |
| 679 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 60 |
| 680 | 20 மைக்ரான்ஸ் தங்க கேஸ் | 15 | 70 |



வாட்டர் ப்ரூப், ஷாக் ப்ரூப்,
சென்டர் செகண்ட், ரேடியம் டயல் (சைஸ் 10½)

| | | | |
|---|---|---|---|
| 723 | க்ரோமியம் ஸ்டீல்பேக் கேஸ் | 15 | 60 |
| 724 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 65 |
| 725 | 20 மைக்ரான்ஸ் தங்க கேஸ் | 15 | 75 |
| 726 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 17 | 80 |
| 727 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 17 | 90 |
| 728 | 20 மைக்ரான்ஸ் தங்க கேஸ் | 17 | 105 |



நீண்ட சதுர வடிவம்
மாற்றியமைக்கக்கூடிய செயினுடன் (சைஸ் 7½)

| | | | |
|---|---|---|---|
| 635 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 5 | 35 |
| 636 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 5 | 38 |
| 638 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 7 | 40 |
| 640 | முழு ரோல்டுகோல்டு கேஸ் | 7 | 46 |
| 700 | க்ரோமியம் ஸ்டீல்பேக் | 15 | 55 |
| 701 | ரோலடுகோல்டு ஸ்டீல்பேக் | 15 | 60 |
| 704 | ரோல்டுகோல்டு ஸ்டீல்பேக் | 17 | 80 |

**ASIA WATCH HOUSE** P. B. 3607, BOMBAY-4



# பிப்ரவரி 9ல்

## தமிழ்நாடெங்கும் வெளிவருகிறது





### கிருஷ்ணா பிக்சர்ஸ்

# வனசுந்தரி

### டைரக்ஷன்: T.R. ரகுநாத்

மதுரை ராமனதபுரம் & திருநெல்வேலி ஜில்லாக்களுக்கு:
ராமனதன் பிக்சர்ஸ், காரைக்குடி

திருச்சி & தஞ்சை ஜில்லாக்களுக்கு:
ஜம்பு பிக்சர்ஸ், திருச்சினப்பள்ளி

வட ஆர்காடு, தென் ஆர்காடு, செங்கல்பட்டு & சித்தூர் ஜில்லாக்களுக்கு: ரீபப்ளிக் பிக்சர்ஸ், வேலூர்

திருவாங்கூர், கொச்சின், சமஸ்தானங்களுக்கும், மலபாருக்கும்: திருவனந்தபுரம் ஸினி பிலிம் டிஸ்ட்ரிப்யூட்டர்ஸ், திருவனந்தபுரம்

சிலோன்: சிலோன் எண்டர்டெயின்மெண்ட்ஸ் லிமிடெட், கொழும்பு

எப். எம். எஸ்: ஷா பிரதர்ஸ் லிமிடெட், சிங்கப்பூர்



# "ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை"

1 மண்டலம் (48 நாள்) க்ரமப்படி பூஜை செய்யப்பட்டது
ஆயுள் பூராவும் பலன் தரக்கூடிய

## வெள்ளி ரக்ஷை ரூ. 43-12-0

தற்போது அனுப்ப வேண்டியது ரூ. 5-12-0. ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை வேண்டியவர்கள் கோரும் கோரிக்கைகளை எழுதி தற்போது ரூ. 5-12-0 மணியார்டர் செய்யவும். கீழே கொடுத்துள்ளபடி நம்மிடம் ரக்ஷை வாங்கியபிறகு 108 நாளைக்குள் நன்மையான பலன்களை அனுபவித்து பாக்கி ரூ. 38-0-0 அனுப்பவும். தற்போது கேட்கும் ரூ. 5-12-0 ரக்ஷை வெள்ளி கவரிங்குக்கும் தபால் ரிஜிஸ்டர் செலவுக்கும், விளம்பர செலவிற்குமாக மேலே கண்ட தொகை கேட்கப்படுகிறது.

### ஸ்ரீ மஹாலக்ஷ்மி ரக்ஷை அணிவதால் ஏற்படும் நன்மைகள்

1. சுகசரீரிகளாயும், எப்போதும் போஜனாதிகளில் குறைவின்றியும் இருப்பார்கள்.
2. குடும்ப ஒற்றுமை, குடும்ப அபிவிருத்தி தனதான்யாதிகள் வாக்குப் பலிதம். குடும்ப நிர்வாக திருப்தி.
3. சகோதரம் ஒற்றுமை, சகோதரமில்லாதவர்களுக்கு சகோதரம் ஏற்படும். பிரிந்த சகோதரர் கூடுவர்.
4. மாதுர் அபிவிருத்தி, வாகன அபிவிருத்தி, பூமி கட்டட அபிவிருத்தி ஏற்படும்.
5. புத்திரர்களுக்கு ரோக நிவர்த்தி, மலடு உடையவர்களா யிருந்தாலும், புத்திரம் ஏற்படும்.
6. சத்துருக்கள் பங்க மடைவார்கள். தீராத ரோகமும் தீரும். ருணம் நிவர்த்தி.
7. வாலிபர்களுக்கு நல்ல குணவதி லபிப்பார்கள். மற்றவர்களுக்கு ஸ்திரீ நேசமும், ஸ்திரீயின் சிநேகத்தையும் கிடைக்கும். பாலியப் பெண்கள் அணிவதால் சத் புருஷனை அடைவார்கள். மற்றவர் அணிவதால் கணவன் ஒற்றுமை. பிரிந்த கணவனை அடைவார்கள்.
8. ஸ்திரீகள் அணிவதால் மாங்கல்ய தீர்க்கமும் புருஷர் அணிவதால் ஆயுள் தீர்க்கமும்.
9. வாலிபர் அணிந்தால் பிதுருவின் பிரீதியை அடைவார். விசேஷ பாக்கியமும், லக்ஷ்மி கடாக்ஷமும் ஏற்படும்.
10. கல்வி பயலுபவர்கள் அணிந்தால் கல்வியில் தேர்ச்சியும், படித்தவர்கள் அணிந்தால் உத்தியோகமும் கிடைக்கும். விவசாயிகளுக்கு கிருஷிகம் மேன்மைபடும். வியாபாரிகளுக்கு வியாபார அபிவிருத்தி ஏற்படும்.
11. அவரவர்கள் செய்யும் தொழிலில் நல்ல ஆதாயம் கிடைக்கும்.
12. நல்ல போக போக்கியமும் லாபத்தை உத்தேசித்து பண விரயமும் ஏற்படும்.

N. B:—அதர்மர்களும், நாஸ்திகர்களும் விசேஷ பலன்களை எதிர்பார்க்க முடியாது. 2. ரக்ஷை ஆர்டர் செய்பவர் ஆர்டர் கிடைத்த 9-ம் நாள்தான் ரக்ஷை பிரசாதத்துடன் அனுப்பப்படும். 3. வி. பி. பி.யில் அனுப்ப சாத்தியப்படாது. 4. வெளிநாட்டு நேயர்கள் இரட்டிப்பு தொகைக்கு பிரிட்டிஷ் போஸ்டல் ஆர்டர் வாங்கி அனுப்பவும்.

●

கோட்டமருதூர்

## ஸ்ரீ மஹாலக்ஷ்மி ஜோதிஷ ஆபீஸ்

அரகண்டநல்லூர் P. O. (S. A. Dt.)

# இந்த 3 பாயிண்டு சேமிப்பு திட்டத்தை உங்கள் பாதுகாப்பு சாஸனமாகச் செய்து கொள்ளுங்கள்

1 உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். உங்களது தற்போதைய தேவைகளுக்காக எவ்வளவு செலவழிக்க நேரிட்டாலும் எதிர்பாராத விதமாக ஏற்படும் செலவுகளுக்கென்று ஏதாவது கொஞ்சம் ஒதுக்கி வைக்கவே நீங்கள் விரும்புவீர்கள். தபால் ஆபீஸ் ஸேவிங்ஸ் பாங்கி சிக்கனத்தை ஆதரிக்கிறது. உங்களது சிறு சேமிப்புகளைப் போட்டு வைக்க தகுதி வாய்ந்த வசதிகளைச் செய்து கொடுக்கிறது. ரூ. 200-க்கு மேல் பாங்கியில் இருந்தால் வருமான வரியின்றி வருஷத்திற்கு 2% வீதம் வட்டியும் தருகிறது. உங்கள் டிபாஸிட் பணத்திலிருந்து அவசரத்துக்கு உடனுக்குடன் பணம் பெறுவதற்கு முடியும். அத்துடன் பாதுகாப்புக்கு உத்தரவாதம்.

2 உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். வருங்காலத்திற்காகப் போதுமான ஏற்பாடுகளை நீங்கள் செய்து கொள்ள விரும்புவீர்கள். நாஷனல் ஸேவிங்ஸ் சர்டிபிகேட்டுகளில் முதலீடு செய்து வையுங்கள். இன்று பிரசித்தமாயுள்ள சேமிப்பு முறை அது தான். ஏனெனில் இவை சர்க்கார் உத்தரவாதம் பெற்றவை. உயர்ந்த விகித வட்டியை தருபவை. மேலும் அவற்றின் மூலம் கிடைக்கும் வட்டிப் பணத்திற்கு வருமான வரி கிடையாது என்பது மட்டுமின்றி, மொத்தமாகக் கிடைக்கும் வருமானமும் வரி விலக்கப் பெற்றது. இன்று ரூ. 100 போட்டு வைத்தால் 12 வருஷத்தில் அது ரூ. 150 ஆகும். 5, 7, வருஷ சர்டிபிகேட்டுகளும் முறையே 3%, 3½% க்குச் சற்றுக் கூடுதலாகவும் கிடைக்கும். இந்த சர்டிபிகேட்டுகளை காலாவதியாவதற்கு முன் தேவை ஏற்பட்டால் மாற்றிப் பணமாக்கிக் கொள்ளலாம். அவை வாங்குவதற்குச் சுலபமானவை; வைத்திருப்பதற்குப் பத்திரமானவை.

3 உங்கள் சொந்த நலனுக்காகவே சொல்லுகிறோம். பொதுவாக நாட்டின் சுபீட்சத்தை அதிகரிப்பதற்காக நீங்கள் தேசிய முயற்சிக்கு உதவி செய்ய விரும்புவீர்கள். உங்களுடைய பெரிய சேமிப்புகளை தேசிய முன்னேற்ற திட்டங்களைப் பூர்த்தி செய்வதற்காகப் போட்டு வையுங்கள். பொது நலத் திட்டக்காரர்களுக்கு, அவ்வப்போது கோரப்படும் சர்க்கார் கடன் பத்திரங்களில் கணிசமான பணம் போடுவதைவிடச் சிறந்த முதலீடு வேறு எதுவும் கிடையாது.

**சாத்தியமானதை எல்லாம்**

**சேமியுங்கள்**

**புத்திசாலித்தனமாக**

**முதலீடு செய்யுங்கள்**

**நேஷனல் ஸேவிங்ஸ் கமிஷனர் அறிக்கை**

**இந்திய சர்க்கார், நிதி மந்திரி காரியாலயம்**

A. C. 226

# லிப்டன்ஸ்

## டீ கெர்ல்

சிறந்த

ஸ்ட்ராங்

டீ

தருகிறது




LTGX-20TM

# பொருள் அடக்கம்

கல்கி

தமிழ்த்திரு நாடு தன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

மலர் 10 இதழ் 27 | 1951 பிப்ரவரி 4 | விக்ருதி ஞு தை 22உ


TESLA



கல்கி

# காவேரி தீரமும் கீதப் பிரவாகமும்

ஆயிரமாயிரம் ஆண்டுகளாகக் காவேரி நதி எத்தனையோ புண்ணியம் செய்திருக்கிறது. சோழ நாட்டை வளப்படுத்திக் கோடிக்கணக்கான மக்களுக்கு அன்னதானம் செய்து வந்திருக்கிறது. இன்றையதினம் தமிழகத்தில் கொடிய பஞ்சம் பரவாமல் மக்கள் அரை வயிற்று உணவேனும் பெற்று வருகிறார்கள் என்றால், அதற்குக் காரணம் காவேரி ஆறுதான்.

அத்தகைய காவேரி நதி இறைவனிடத்தில் முறையிட்டுக் கொண்டது. "இத்தனை புண்ணியம் இத்தனை காலமாகச் செய்து வருகிறேனே! எனக்கு மோட்சம் கிடையாதா? சொர்க்க லோகத்துக்கு வராமல் என்றென்றைக்கும் நான் இந்தப் பூமியில் இருந்து வரவேண்டியதுதானா?" என்று கேட்டது.

அதற்கு இறைவன் திருவாய் மலர்ந்ததாவது:—"பொன்னி நதியே! உன்னுடைய புண்ணியத்துக்கெல்லாம் ஈடாகக்கூடிய சொர்க்க இன்பத்துக்கும் மேலான ஆனந்தத்தை உனக்கு அளிக்கிறேன். உன்னுடைய கரையருகில் ஸ்ரீ தியாகப்பிரம்மம் என்னும் மகான் சிறிதுகாலம் வசிப்பார். இணையற்ற நாத சுகம் ததும்பும் பக்திமயமான கீர்த்தனங்களை இயற்றுவார். அந்த மகானுடைய சமாதியும் அவ்விடத்தில் ஏற்படும். ஆண்டுதோறும் ஸ்ரீ தியாகப் பிரம்ம உற்சவத்தைக் கொண்டாடுவதற்காக அங்கே கர்நாடக சங்கீத வித்வான்கள் அனைவரும் ஒருங்கே வந்து கூடுவார்கள். அவருடைய அமர கீர்த்தனங்களைப் பாடுவார்கள். பல்லாயிரக்கணக்கான மக்கள் கேட்டுப் பரவசமடைவார்கள். அவர்களுடைய ஆனந்தமெல்லாம் ஒன்று சேர்ந்து உன்னைச் சேரும்! உன்னுடைய இரு கரையும் ததும்பும்படியாக நாத வெள்ளமும் கீதப் பிரவாகமும் பொங்கிப் பெருக்கெடுத்து அலை மோதிக்கொண்டு ஓடும்! இதைக் காட்டிலும் வேறு என்ன இன்பத்தைச் சொர்க்க லோகத்துக்கு வந்து நீ அடையப் போகிறாய்? பூலோகத்திலேயே இருந்து புண்ணியம் செய்து கொண்டு அதன் பலனையும் அடைந்து ஆனந்தமாக வாழ்வாயாக!"

இறைவன் அளித்த இந்த வரப்பிரசாதம் காவேரி நதிக்குப் பூரண திருப்தி அளித்தது. இன்றைக்குத் தேவர்கள் எல்லாம் சேர்ந்து வந்து காவேரியைப் பார்த்து, "சொர்க்கத்துக்கு வரவேண்டும்" என்று வருந்தி அழைத்தாலும், "வேண்டாம்! நான் இங்கேயே இருக்கிறேன். நீங்களும் ஆண்டுக்கு ஒரு முறை திருவையாற்றுக்கு வந்து இங்கே பொங்கும் கானாமுதத்தைப் பருகி விட்டுச் செல்லுங்கள். தேவாமிர்தம் என்று சொல்கிறீர்களே, அதற்கு இவ்வளவு மகிமை உண்டா என்று தெரிந்து கொண்டு திரும்புங்கள்!" என்று காவேரித்தாய் சொல்லுவாள் என்பதில் ஐயமில்லை.

* * *

இந்தியா தேசத்திலும் வெளிநாட்டிலும் உள்ள தமிழர்களையெல்லாம் ஒன்று சேர்த்துப் பிணைப்பதற்கு மகாகவி பாரதியார் உதவியிருப்பது போல், தென்னிந்தியர்கள் உலகத்தில் எப்பகுதியில் இருந்தாலும் அவர்களை ஐக்கியப் படுத்துவதற்கு ஸ்ரீ தியாகராஜர் துணை புரிகின்றார். பக்தியும் வைராக்யமும் தியாகமும் சீலமும் நாதமும் கீதமும் சுருதியும் லயமும் ஓர் உருக் கொண்டன என்று சொல்லும்படியான மகாபுருஷர் ஸ்ரீ தியாகராஜர்.

தியாகராஜர் சமாதி அடைந்து நூறு ஆண்டு ஆன பிறகு, அவர் அமரர் என்பது திட்டமாக நிரூபிக்கப்பட்டிருக்கிறது. அவர் இயற்றிய பக்தி மயமான கீர்த்தனங்கள் புத்தம் புதிய ஜீவ சக்தியுடன் ஒளிர்கின்றன.

புனிதமான காவேரி தீரத்தில், ஸ்ரீ தியாகராஜர் மகாசமாதியின் முன்னிலையில், அவர் முக்தியடைந்த பஹுளபஞ்சமி தினத்தையொட்டி, நூற்றுக் கணக்கான சங்கீத வித்வான்களும், பதினாயிரக் கணக்கான சங்கீத ரஸிகர்களும் கூடுகிறார்கள். அவருடைய கீர்த்தனங்களைப் பாடியும் கேட்டும் சங்கீத மகோத்ஸவம் கொண்டாடுகிறார்கள்.

“இந்த மாதிரியான ஒரு ஞாபகச் சின்ன வைபவக் கொண்டாட்டம் இந்தியாவில் பிறந்த வேறு எந்த மகானுக்கும் நடைபெறுவதில்லை!” என்று நமது ராஜாஜி அவர்கள் கூறி வியந்தார்கள் என்றால், ஸ்ரீ தியாகராஜரின் மகிமையைக் குறித்து வேறு என்ன சொல்ல இருக்கிறது?

* * *

இந்த ஆண்டில் திருவையாற்றில் நடந்த ஸ்ரீ தியாகப் பிரம்ம உற்சவம் பல வகையிலும் சிறப்புற்று விளங்கியது என்பதை நேயர்கள் தினப் பத்திரிகைகளின் மூலமாகவும் வானொலி மூலமாகவும் அறிந்திருப்பார்கள்.

ஸ்ரீ தியாகப் பிரம்ம மகோத்ஸவ சபையின் தலைவர் பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்கள் நமது ராஜாஜியை வரவேற்றபோது, “தென்னிந்தியாவின் முதிர்ந்த கலைப் பண்பாட்டின் சிகரம்” என்று ராஜாஜியைப் பற்றிக் கூறினார்கள். அத்தகைய ராஜாஜி இவ்வருஷத்துத் தியாகராஜ உற்சவத்தை ஆரம்பித்து வைத்தார்கள்.

ராஜாஜி தமது ஆரம்பப் பிரசங்கத்தில் கூறிய சில விஷயங்கள் சங்கீத வித்வான்களையும் ரஸிகர்களையும் கரைகாணா வியப்பினாலும் மகிழ்ச்சியினாலும் திக்குமுக்காடச் செய்துவிட்டன.

“மண்ணும், செம்பும், வெள்ளியும், தங்கமும் சாதாரண நிலையில் வெறும் மண்ணும் செம்பும் வெள்ளியும் தங்கமுமாக இருக்கின்றன. கைதேர்ந்த சிற்பியின் கையில் அவை அற்புதமான கலை வடிவம் பெற்றுத் தெய்வ விக்கிரகங்களாகின்றன. கர்நாடக சங்கீதத்தில் வழங்கும் ராகங்கள் சாதாரண நிலையில் மண்ணையும் செம்பையும் வெள்ளியையும் தங்கத்தையும் போன்றவை. அந்த ராகங்கள் ஒவ்வொன்றையும் எடுத்துப் பரம பக்தரான தியாகராஜர் தம் இஷ்ட தெய்வமான ஸ்ரீராமரின் பிம்பமாகச் செய்தார். தியாகராஜ கீர்த்தனம் ஒவ்வொன்றும் ஸ்ரீ ராமரின் ஒவ்வொரு வடிவமாகும்!” என்றார் ராஜாஜி.

அந்தக் கீர்த்தனங்களைப் பாடும் முறையைப் பற்றியும் ஒரு அழகான உவமை கூறினார்.

தவனம் என்றும் மருக்கொழுந்து என்றும் வழங்கும் பச்சிலை மணம் மிக்கது; கடவுளுக்கு அர்ப்பணம் செய்யக்கூடியது. ஆனால் அதை மாட்டின் முன்னால் வைத்தால் மாடு என்ன செய்யும்? தவனத்தின் நறு மணத்தை அதனால் அநுபவிக்க முடியுமா? அதையும் ஒருவகைப் புல் என்று எண்ணித் தின்னப் பார்க்கும்! பக்தி ததும்பும் தியாகராஜ கீர்த்தனங்களை வெறும் சங்கீதமாகக் கருதி அநுபவிப்பது தவனத்தைத் தின்னப் பார்ப்பது போலத்தான். பக்தி பாவத்தை உணர்ந்து பரவசமடைந்து பாடுவதும் கேட்பதுந்தான் உண்மையாகத் தியாகராஜ கீர்த்தனங்களை அநுபவிப்பதாகும்.... ..

இவ்விதம் ராஜாஜி கூறினார். முடிவில் வந்தனோபசாரம் கூறிய ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் உணர்ச்சி மிகுதியினால் நாத் தழுதழுக்கப் பேசியபோது, “இத்தனை காலமாகச் சங்கீத வித்வான்களாகிய நாங்கள் ஸ்ரீ தியாகராஜ கீர்த்தனங்களைப் பாடி வருகிறோம். ஆனால் அக்கீர்த்தனங்களின் சொரூபம் என்ன, மகிமை என்ன,—என்பதை இன்றைக்குத்தான் தெரிந்து கொண்டோம். ராஜாஜி கூறித்தான் தெரிந்து கொண்டோம்” என்றார். அந்த மகாசபையில் கூடியிருந்த சுமார் இருபதினாயிரம் ரஸிகர்களும் அதை ஆமோதித்தார்கள்.

புதுடில்லியில் மிக முக்கியமான காங்கிரஸ் காரியக் கமிட்டிக் கூட்டம் நடந்தது. எனினும் அச் சமயத்தில் ராஜாஜி திருவையாற்றுக்கு விஜயம் செய்ததிலிருந்து, தென்னாட்டுக் கலைப் பண்பாட்டையும் கர்நாடக சங்கீதத்தையும் எவ்வளவு மேலாக அவர்கள் கருதுகிறார்கள் என்பது வெளியாயிற்று.




திருவையாற்றில் ஸ்ரீ தியாகப்பிரம்ம ஆராதனை மகோத்ஸவத்தை ராஜாஜி ஆரம்பித்து வைக்கிறார்கள். மேடையில் பிரதம நீதிபதி ராஜமன்னார், கனம் கோபால ரெட்டி ஆகியவர்களையும் மகாசபையின் முன்னணியில் ஸ்ரீ பல்லடம் சஞ்சீவிராயர், ஸ்ரீமதி பெங்களூர் நாகரத்தின அம்மாள் முதலியோரையும் காணலாம்.

---

சென்னையில் கர்நாடக சங்கீதக் கல்லூரி அமைப்பதற்கு ராஜாஜிதான் முதன் முதல் திட்டம் வகுத்தார் என்பதையும் இந்த சந்தர்ப்பத்தில் ஞாபகப் படுத்திக் கொண்டு, கர்நாடக சங்கீத ரஸிகர்களின் சார்பாக ராஜாஜிக்கு நன்றி தெரிவித்துக் கொள்கிறோம்.

* * *

திருவையாற்றில் பல வருஷ காலமாகத் தியாகப்பிரம்ம உற்சவம் சிறப்பாக நடந்து வந்தது. பழைய தலைமுறையைச் சேர்ந்த வித்வான்கள்,—பிடில் கோவிந்தசாமிப் பிள்ளை, சூலமங்கலம் வைத்திநாத பாகவதர் போன்றவர்கள்,—பக்தி சிரத்தையுடன் நடத்தி வந்தார்கள். பெரிய கோஷ்டி, சின்ன கோஷ்டி என்று போட்டி போட்டுக்கொண்டு நடத்தினார்கள்.

இதற்கிடையில், பெங்களூர் நாகரத்தின அம்மாள் என்னும் பெண்மணி திருவையாற்றுக்கு வந்து சேர்ந்தார். 'அபலை'யாகிய அப்பெண்மணி வேறு யாரும் செய்யாத -- செய்ய நினைக்காத — கைங்கரியத்தைக் குருநாதருக்குச் செய்தார். சமாதியை யொட்டிச் சிறிய கோவில் எழுப்பினார். சுற்றிலும் உள்ள விஸ்தாரமான நிலப் பிரதேசத்தையும் வாங்கித் தியாகராஜரின் கைங் கரியத்துக்குப் பயன்படுத்தினார்.

அவர் வாங்கி வைத்த நிலத்திலேதான் இன்றைக்கு விசாலமான அலங் காரப் பந்தல் அமைத்து உற்சவம் நடத்துகிறார்கள். பதினாயிரக்கணக்கான ரஸிகர்கள், தியாகராஜரின் சந்நதியில் அமர்ந்து சங்கீதக் கச்சேரிகளைக் கேட்கவும் ஆராதனை உற்சவத்தைப் பார்க்கவும் முடிகிறது.

எனவே, தீர்க்கதிருஷ்டி வாய்ந்த இந்தப் பரமபக்தையின் கைங்கரியத்தை ஒரு முகமாகத் தியாகராஜ பக்தர்கள் அனைவரும் பாராட்டுகிறார்கள்.

* * *

சுமார் பத்து வருஷங்களுக்கு முன்பு பெரிய கட்சி, சின்னக் கட்சி என்னும் பேதங்களை நீக்கிச் சங்கீத வித்வான்களும் ரஸிகர்களும் ஒன்றுபட்டுத் தியாகராஜ உற்சவத்தை நடத்துவதென்று ஏற்பாடாயிற்று. அப்போது அமைந்த தியாகப்பிரம்ம மகோத்ஸவ சபைக்கு ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் காரியதரிசி ஆனார். வித்வத்திலும் சீலத்திலும் சுமுகமாகப் பழகுவதிலும்

சிறந்தவரான ஸ்ரீ முசிரி சுப்பிரமணிய ஐயர் காரியதரிசிப் பதவி ஏற்றதிலிருந்து வருஷந்தோறும் உற்சவத்தின் சிறப்பு வளர்ந்து வருவதைக் காண்கிறோம்.

ஆனாலும் அவ்வப்போது, "இந்த வித்வான் கோபித்துக் கொண்டு இவ் வருஷம் உற்சவத்துக்கு வரவில்லை" "இன்னொரு வித்வான் உற்சவத்துக்கு வந்தும் பாடாமல் போய்விட்டார்!" என்றெல்லாம் புகார்கள் கிளம்புவதுண்டு.

ரசிக சிகாமணியான பிரதம நீதிபதி ராஜமன்னார் அவர்கள் உற்சவக் கமிட்டியின் தலைவர் ஆனதிலிருந்து மேற்கண்டவாறு புகார்கள் கிளம்புவதும் நின்று போய்விட்டன. கொஞ்ச நஞ்சம் பாக்கியுள்ள சிறிய புகார்களும் நமது மாபெருந் தலைவர் ராஜாஜி விஜயம் செய்ததின் பலனாக நீங்கிவிடும் என்று எதிர்பார்க்கலாம்.

தென்னாட்டிலுள்ள சகல சங்கீத வித்வான்களும் நாதஸ்வர வித்வான்களும் சங்கீத ரஸிகர்களும் ஒத்துழைத்து ஆண்டுதோறும் மேலும் மேலும் சிறப்பாகத் தியாகப் பிரம்ம உற்சவத்தை நடத்தித் தென்னாட்டின் புகழை நிலைநாட்டுவார்கள் என்று நம்புகிறோம்.

# பாரதம் பெற்ற மாபெரும் தலைவர்

**பா**ரத நாட்டின் பிரதம மந்திரி ஜவாஹர்லால் நேருவின் ஒளி வீசும் திருமுக மண்டலம் இந்தக் "கல்கி" இதழின் அட்டையில் கம்பீரமாகக் காட்சி தருகின்றது.

இந்திய சுதந்திரப் போரில் சாத்வீகக் கொள்கையைப் பின்பற்றி வெற்றி பெறும் வழியைக் காந்தி மகான் தேச மக்களுக்குக் காட்டினார். உலக நாடுகளின் சுதந்திரத்தைப் பாதுகாக்கவும் ஆயுதப் போரை ஒழித்து உலக சமாதானத்தை நிலை பெறச் செய்யவும் அந்த வழிதான் சிறந்தது என்று மகாத்மா இடைவிடாது கூறி வந்தார்.

மகாத்மாவின் அந்தக் கனவை நிறைவேற்றும் மகத்தான பொறுப்பை ஜவாஹர்லால்ஜி ஏற்றுக் கொண்டிருக்கிறார். காந்திஜி காட்டிய வழியைப் பின்பற்றினால்தான் உலகத்திலே போர் தவிர்க்கப்பட்டு அமைதி நிலவும் என்பதை உலக நாடுகளுக்குத் தெள்ளத் தெளிய எடுத்துக் காட்டி வருகிறார்.

சர்வதேச விவகாரங்களில் ஜவாஹர்லால்ஜிக்கு உள்ள மேதைதான், உலக நாடுகளிடையே இன்று பாரத நாடு மிகுந்த மதிப்பும் மகோன்னதமான செல்வாக்கும் பெற்று விளங்கும்படி செய்திருக்கிறது. "நேற்று சுதந்திரம் பெற்ற பாரத நாட்டுக்கு உலக விவகாரங்களில் இவ்வளவு செல்வாக்கா!" என்று அமெரிக்கப் பத்திரிகைகள் பொறாமை கொண்டு அங்கலாய்க்கும் நிலைமையை நமது தலைவர் ஏற்படுத்தி யிருக்கிறார்.

இந்தியா சுதந்திரம் பெற்றது முதல் அமெரிக்கப் பத்திரிகைகள் ஒரு சமயம் நேருஜியைப் போற்றுவதும் மற்றொரு சமயம் அவரைத் தூற்றுவதுமாக இருந்து வருகின்றன. மேற்படி பத்திரிகைகளின் தடுமாற்றத்துக்கு, நமது அருமைத் தலைவர் அனுஷ்டித்து வரும் பாரபட்சமற்ற, நேர்மையான அரசியல் கொள்கையே காரணம் ஆகும். 'சர்வதேச நீதியும், கொள்கையும் எக்கேடு கெட்டால் என்ன!' என்ற நோக்கத்துடன் இந்தியா அமெரிக்காவை ஆதரித்து வந்திருந்தால், இன்று அமெரிக்கப் பத்திரிகைகள் ஜவாஹர்லால்ஜிக்குப் புகழ் மாலை சூட்டி வரும்; அமெரிக்கா இந்தியாவுக்குக் கோடிக் கணக்கில் பண உதவி புரிய முன் வந்திருக்கும்; தன்னிடம் தேங்கிக் கிடக்கும் உணவு தானியங்களை அவசரம் அவசரமாக அனுப்பவும் இசைந்திருக்கும்.

ஆனால் நமது தலைவர் இந்தியாவின் சுயநலனைப் பெரிதாகக் கருதவில்லை. தற்காலிகமான கஷ்ட நஷ்டங்களைச் சமாளிப்பதற்காக நீதியையும் நிரந்தரமான நற்பெயரையும் உலகத்தின் க்ஷேமத்தையும் பலி கொடுக்க விரும்பவில்லை.

*　　　*　　　*

**உ**லக நாடுகளிடையே நிலவி வரும் சூழ்நிலைகளைக் களைந்து உலகத்துக்கு நல்வழி காட்ட முனைந்துள்ள ஜவாஹர்லால்ஜி நம் இந்திய நாட்டின் முன்னேற்றத்துக்கும் ஒளி தந்து வழி காட்டும் சுடர்ச் சோதியாக விளங்குகிறார்.

நாடு சுதந்திரம் பெறுவதற்குக் காரணமான காங்கிரஸ் இன்று மலிந்து கிடக்கும் சூழ்நிலைகளைத் தாமதமின்றிக் களைய வேண்டிய அவசியத்தை வற்புறுத்தி வருகிறார். காங்கிரஸ்வாதிகளை வன்மையாகக் கண்டித்திருக்கிறார்.

சென்ற வாரம் ஆமதாபாத்தில் நடந்த அகில இந்திய காங்கிரஸ் கமிட்டிக் கூட்டத்தில் ஜவாஹர்லால்ஜி கூறிய விஷயங்களைத் தேசபக்தர்கள் ஆராய்ந்து பார்க்க வேண்டும்.

"காங்கிரஸ் ஒரு சிலர் அடங்கிய கோஷ்டியல்ல; ஒரு சிலருக்கு மாத்திரம் ஏகபோகமான ஸ்தாபனம் அல்ல. காங்கிரஸ் இந்திய மக்களின் ஸ்தாபனம். பொதுஜனத் தொண்டே அதன் ஜீவநாடி. காங்கிரஸில் குடிபுகுந்துள்ள சூழ்நிலைகளைக் களைந்து தூய்மைப் படுத்த வேண்டும். காங்கிரஸிலிருந்து பிரிந்து போனவர்களும் திரும்பி வருவதற்கு வழி செய்யவேண்டும்."

ஜவாஹர்லால்ஜியின் மேற்படி வார்த்தைகளைக் காங்கிரஸ்வாதிகளும் தேசமக்களும் சிந்தித்துப் பார்ப்பார்களாக! காங்கிரஸைத் தூய்மைப்படுத்திப் பாரதநாடு பலமும் புகழும் பெற்று விளங்கும் விஷயத்தில் உத்தமத் தலைவருக்கு உறுதுணையாக நிற்பார்களாக!

# காங்கிரஸ் அங்கத்தினர்

காங்கிரஸ் அங்கத்தினர் சம்பந்தமான விதிகளை மாற்றுவதென்று ஆமதாபாத்தில் கூடிய அகில இந்திய காங்கிரஸ் கமிட்டி முடிவாகத் தீர்மானித்திருக்கிறது. பழைய அமைப்பின்படி காங்கிரசில் மூன்று வகை அங்கத்தினர்கள் உண்டு. இந்த முறையே பல்வேறு ஊழல்களுக்கும் நிலைக்களமா யிருந்தது என்று ஏற்கெனவே குறிப்பிட்டிருந்தோம்.

இப்போது நிறைவேறிய தீர்மானத்தின்படி காங்கிரசில் இருவகை அங்கத்தினர்களே இருப்பார்கள். 1. ஒரு ரூபாய் சந்தா செலுத்துவோர்: 18 வயதுக்குக் குறையாத சகலரும் காங்கிரஸ் இலட்சியத்தில் கையொப்பமிட்டு ஒரு ரூபாய் கொடுத்து அங்கத்தினராகச் சேர்ந்து கொள்ளலாம். 2. ஏதாவது நிர்மாண வேலையில் ஈடுபட்டிருப்போர்: இவர்கள் 21 வயதுக்குக் குறைந்தவர்களாக இருக்கக் கூடாது; எப்போதும் கதர் உடுத்தவேண்டும்; எவ்வித மதுவகையும் அருந்தக் கூடாது; எவ்விதத்திலும் தீண்டாமையை ஆதரிக்கக் கூடாது; ஜாதி, சமய வேற்றுமையின்றி எல்லோருக்கும் சம உரிமை உண்டு என்பதில் நம்பிக்கையுடையவராக இருக்கவேண்டும்; சமூக ஒற்றுமையில் நம்பிக்கையுள்ளவராக இருக்க வேண்டும்; ஏதாவது தேசிய, சமூக அல்லது சமுதாயத் தொண்டில் ஈடுபட்டவராக இருக்க வேண்டும்; வேறு எந்த அரசியல் அல்லது சமூகக் கட்சியிலும் அங்கத்தினராக இருக்கக்கூடாது.

காங்கிரஸ் நிர்வாக சபைகளின் ஆயுட்காலம் ஏற்கெனவே மூன்று வருஷங்களாக நிர்ணயிக்கப்பட்டிருந்தது. அதை இப்போது இரண்டு வருஷங்களாகக் குறைத்திருக்கிறார்கள். இது நல்ல காரியம்தான். ஊழல்கள் ஏற்பட்டாலும் இரண்டு வருஷங்களுக்கு ஒரு தடவை களைந் தெறியச் சந்தர்ப்பம் கிடைக்கும் அல்லவா!

காங்கிரஸ் பஞ்சாயத்து அங்கத்தினர் என்ற ஒரு புதிய ஜாதியை உண்டாக்கி, இவர்கள்தான் காங்கிரஸ் நிர்வாகிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்ற ஏற்பாடுதான் லஞ்ச ஊழல்களுக்கெல்லாம் காரணமாயிருந்தது. புதிய விதிகளின்படி காங்கிரஸ் பஞ்சாயத்துக்கள் ஒழிக்கப்படுவது மிகவும் மகிழ்ச்சிக்குரியது.

இவ்வாறாக, காங்கிரஸ் அங்கத்தினர் சம்பந்தப்பட்டவரையில் அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி செய்துள்ள மாறுதல்கள் ஊழல்களை ஓரளவாவது களைவதற்கு உதவியாக இருக்கும் என நம்புகிறோம்.

மற்றும் காங்கிரஸ் அமைப்பில் செய்துள்ள திருத்தங்கள் ஊழல்களை அறவே களைந்து, ஒற்றுமையை நிலைநிறுத்தி, காங்கிரஸ் ஸ்தாபனத்தைத் தூய்மைப்படுத்த உதவியாயிருக்கும் என்று எதிர்பார்க்கிறோம்.

# அக்கப் போர்

"அமெரிக்காவின் வலிமையைச் சரியாக அறிந்து கொள்ளாமல் கெய்ஸரும், ஹிட்லரும் தவறு செய்தனர். அதே தவறை ரஷ்யாவின் தலைவர்கள் செய்ய வேண்டாம்" என்று ட்ரூமன் எச்சரித்தார். —செய்தி

நெப்போலியனும், ஹிட்லரும் ரஷ்யாவின் வலிமையைச் சரியாக அறிந்து கொள்ளாத தவறைச் செய்திருக்கின்றனர். அதே தவறை ட்ரூமனும் செய்ய வேண்டாம் என்று ருஷியர்கள் எச்சரிக்கலாம் அல்லவா!

★

"தலையில் வழுக்கை விழ ஆரம்பித்த சிலர், நிறைய மயிர் வளரச் செய்யும் தைலத்தைத் தயாரித்துத் தருகிறேன் என்று சொன்ன ஒருவரிடம் ஏராளமான பணத்தைக் கொடுத்து விட்டனர். பிறகு அந்த ஆசாமியைக் காணவே யில்லையாம்." —ஒரு செய்தி

இந்த வழுக்கை ஆசாமிகளை அந்த ஆள் சரியானபடி மொட்டை அடித்து விட்டான் போலிருக்கிறது!

★

"சங்கீதத்தைப் பற்றிப் பேசக் கூடாது. சங்கீதத்தை நாம் அப்யசிக்க வேண்டும்." — ஒரு ரசிகர்

சங்கீதத்தைப் பற்றி நாம் பேசுவதற்கெல்லாம் நாம் "பாட நான்கு பேர்கள் இருக்கும் வரை சங்கீதத்தைப் பற்றிப் பேசுவதில் என்ன தவறு இருக்கக் கூடும்!

★

"மர வள்ளிக் கிழங்கிலிருந்து செயற்கை அரிசி செய்யலாம்." —செய்தி

மரம் வைத்த மந்திரி முன்ஷி இந்தச் செய்தியைப் பற்றி ஆர அமர ஆலோசித்துப் பார்ப்பாராக!

★

"உடனடியாக 136 தானிய நியாய விலைக் கடைகள் திறக்கப்படும்." —வேலூர்ச் செய்தி

"நவதானியங்கள்தான் உண்டு என நான் இதுவரை நினைத்திருந்தேன். 136 தானியங்கள் உண்டா! எனக்குத் தெரியாதே" என்கிறார் ஒரு ரேஷன் கார்டுக்காரர்.

★

"கிழவனைக் குமரனாக்கும் பழம் ஒன்று நியூஜிலாந்தில் இருக்கிறதாம்."

பிறரைக் குமரனாக்கும் வல்லமைபெற்ற அந்தப் பழம் தான் மட்டும் காயாக (இளமையாக) இல்லாமல் எப்படிப் பழுத்தது!

★

"மீன் கூடைக்குள் ஒளித்து வைத்திருந்த கள்ளத் தங்கக் கட்டியைச் சுங்க அதிகாரி ஒருவர் கைப்பற்றினார்." —செய்தி

ஓடு மீன் ஓட இந்தக் கூடை மீன் வருமளவும் காத்திருந்த சுங்க அதிகாரியைப் 'பெரிய கொக்கு' என்றுதான் கூற வேண்டும்!

அமெரிக்காவில், 1950-ம் வருஷத்தில் 100க்கு 9 பேர் விதம் மிகக் குறைந்த பேர்களே இறந்திருக்கிறார்கள் என்று இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகள் ரிப்போர்ட் ஒன்று கூறுகிறது. —செய்தி

அப்படியானால் கொரியா யுத்த விருத்தி முயற்சிகளில் இன்ஷ்யூரன்ஸ்காரர்களும் அக்கறை காட்டலாம்.

★

"ஸ்டாலினை நேரில் கண்டு பேச மாஸ்கோவுக்கு ட்ரூமன் விரைய வேண்டும்." —ஒரு பிரமுகர்

முதலில் ரஷ்யக் குளிர் விடட்டும்!

★

"திறந்த வெளியில் பொதுக் கூட்டம் நடத்தினால் நான் பேசுவதைக் கேட்க லட்சக்கணக்கில் ஜனங்கள் கூடுவார்கள். சென்னை சர்க்கார் திறந்த வெளிக் கூட்டத்துக்கு அனுமதி அளிக்காதது பேச்சுச் சுதந்திரத்தில் தலையிடுவதுதான்." —செயின்ட் மேரீஸ் ஹாலில் ஸ்ரீ கிருபளானி

வைத்திய சிகிச்சைக்காக சென்னை வந்திருக்கும் ஸ்ரீ கிருபளானிக்குத் திறந்த வெளிப் பனி உடம்புக்கு ஒத்துக் கொள்ளாது என்பது சென்னை சர்க்காரின் கருத்தாய் இருக்கலாம்!

★

"தனி ஆந்திர மாகாணம் கடை சரக்கா என்ன, எடுத்துக் கொடுப்பதற்கு!" என்று சென்னைப் பிரதமர் கேட்டார். —செய்தி

கடைச் சரக்கை மட்டும் இந்த நாளில் கேட்டதும் எடுத்துக் கொடுத்து விடுகிறார்களா, என்ன!

★

"சென்ற வாரம்தான் கஸ்தூரிபா காந்தி ஞாபகார்த்த நிதிக்கு ஸர்தார் வல்லபாய் படேலுக்குப் பதிலாகத் தலைவராகத் தேர்ந்தெடுக்கப்பட்ட தக்கர் பாபா காலமானார்." —செய்தி

இனி அந் நிதிக்குத் தக்க தலைவர், யார் வரப் போகிறார்களோ!

★

"புத்திசாலிகளுக்கு நம் நாட்டில் குறைவில்லை." —ஸ்ரீ கிருபளானி

ஸ்ரீ கிருபளானி புத்திசாலிகள் என்று பன்மையில் கூறி யிருப்பதால், அவரைத் தவிர இன்னும் சிலரும் இருப்பதாகத் தெரிகிறது.

★

"பிரெஞ்ச் இந்தியாவைப் பிரான்ஸ் கைவிடாது." —செய்தி

அப்படியானால் பிரெஞ்ச் இந்தியா பிரான்ஸைக் கைவிடுவது நிச்சயம்.

★

"ஒரு பிரபல வியாபாரியின் வீட்டில் இரவில் திருடர்கள் புகுந்தார்களாம். ஆனால் அந்த வியாபாரி விழித்துக் கொண்டிருந்ததால் திருடர்களால் ஒன்றும் கொள்ளை யடிக்க முடிய வில்லையாம்." —செய்தி

திருடர்களிடம் அவரால் ஏதாவது கள்ள மார்க்கெட் செய்ய முடிந்ததா!



''மங்கம்மா சபதம்'' என்னும் தமிழ்ப் படக் கதையை ''மங்களா'' என்ற புதுமைப் பெயரில் ஹிந்தியிலும், தெலுங்கிலும் தயாரித்து ஜெமினி வெளியிட்டிருக்கிறது. படத்தில் ஸ்ரீமதி பானுமதி ஸ்ரீ ரஞ்சன், ஸ்ரீ டி. ஆர். ராமச்சந்திரன் முதலியோர்கள் நடித்திருக்கின்றனர். ஜெமினியின் படமல்லவா? சம்பவங்கள், காட்சி ஜோடனைகள், நடனக் காட்சிகள் எல்லாமாகச் சேர்ந்து படம் நல்ல விறுவிறுப்புடன் இருக்கிறது.

# பொன்னியின்

## அத்தியாயம் 32

## பரிசோதனை

சின்னப் பழுவேட்டரையரைக் கண்டதும் வந்தியத்தேவன் சண்டையை நிறுத்தி விட்டு அவரை நோக்கி நடந்தான். காவலர்கள் எழுந்து ஓடி வந்து அவனைப் பிடித்துக் கொண்டார்கள். அவர்களை அவன் சிறிதும் இலட்சியம் செய்யாமல் நாலு அடி முன்னால் நடந்து வந்து, "தளபதி! நல்ல சமயத்தில் தாங்கள் வந்து சேர்ந்தீர்கள். இந்தப் பக்காத் திருடர்கள் என்னுடைய உடைமைகளைத் திருடிக் கொண்டது மல்லாமல், என்னையும் கொல்லப் பார்த்தார்கள்! விருந்தாளியை இப்படித்தானா நடத்துவது? இதுவா தஞ்சாவூர் சம்பிரதாயம்? நான் தங்களுக்கு மட்டும் விருந்தாளியல்ல; சக்கரவர்த்திக்கும் விருந்தாளி; சக்ரவர்த்தினி சொன்னதைத்தான் தாங்களும் கேட்டீர்களே! பட்டத்து இளவரசரிடமிருந்து ஓலை கொண்டு வந்த தூதன். அப்படிப்பட்ட என்னை இந்தப் பாடுபடுத்துகிறவர்கள் மற்றவர்களை என்ன செய்துவிட மாட்டார்கள்! இப்படிப்பட்ட திருடர்களைத் தங்கள் பணி ஆட்களாக வைத்துக்கொண்டிருப்பது பற்றி ஆச்சரியப் படுகிறேன். எங்கள் தொண்டை மண்டலத்தில் இப்படிப்பட்ட திருடர்களை உடனே கழுவில் ஏற்றி விட்டு மறு காரியம் பார்ப்போம்!" என்று சரமாரியாய்ப் பொழிந்தான்.

மூன்று வீரர்களை ஏக காலத்தில் எதிர்த்துப் புரட்டிக் கீழே தள்ளிய வாலிபனுடைய வீரச் செயலைப் பற்றிய வியப்பு இன்னும் பழுவேட்டரையரின் மனதை விட்டகலவில்லை. இத்தகைய வீரனை நாம் நமது காவற் படையில் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்னும் ஆசை அவருக்கு அதிகமாயிற்று. எனவே, அவர் சாந்தமான குரலில் "பொறு! தம்பி! பொறு! அப்படி யெல்லாம் இவர்கள் செய்திருப்பார்கள் என்று தோன்றவில்லை! இவர்களை விசாரித்துப் பார்க்கிறேன்!" என்றார்.



# செல்வன்



"நான் கோருவதும் அதுதான்! இவர்களை விசாரியுங்கள்; விசாரித்து நீதி வழங்குங்கள்! என்னுடைய உடையும் உடைமையும் என்னிடம் திரும்பி வருவதற்கு ஏற்பாடு செய்யுங்கள்!" என்றான் வல்லவரையன்.

"அடே! அந்தப் பிள்ளையை விட்டு விட்டு இப்படி வாருங்கள்! நான் சொன்னது என்ன? நீங்கள் செய்தது என்ன? இவன் மீது ஏன் கை வைத்தீர்கள்!" என்று கோபமாகக் கேட்டார் கோட்டைத் தளபதி.

"எஜமானே! தாங்கள் சொன்னது சொன்னபடியே செய்தோம். இவரை எண்ணெய் முழுக்காட்டிப் புதிய ஆடைகளையும் ஆபரணங்களையும் அணிவித்தோம். அறுசுவை உண்டி அளித்தோம். சித்திர மண்டபத்துக்கும் அழைத்து வந்தோம்! இவர் சிறிது நேரம் சித்திர மண்டபத்தில் உள்ள சித்திரங்களைப் பார்த்துக்கொண்டிருந்தார். திடீரென்று நினைத்துக் கொண்டு இவருடைய பழையவுடைகளைக் கேட்டார். உடனே எங்களைத் தாக்கவும் ஆரம்பித்தார்!" என்றான் அவ்வீரர்களில் ஒருவன்.

"ஒரு சிறு பிள்ளையிடமா மூன்று தடியர்கள் அடிபட்டு விழுந்தீர்கள்?" என்று கூறி இரத்தக் கனல் வீச விழித்துப் பார்த்தார்.

"எஜமான்! அரண்மனை விருந்தாளியாயிற்றே என்று யோசித்தோம். இப்போது சற்று அநுமதி கொடுங்கள்; இவனை உடனே வேலை தீர்த்து விடுகிறோம்."

"போதும் உங்கள் வீரப் பிரதாபம்! நிறுத்துங்கள்! தம்பி!...... நீ என்ன சொல்லுகிறாய்?"

"இவர்களுக்கு அநுமதி கொடுங்கள் என்றுதான் சொல்கிறேன். எனக்கும் அநுமதி கொடுங்கள். சோழ குலத்துப் பகைவர்களோடு போராடிக் கொஞ்சம் நாள் ஆயிற்று. தோள்கள் தினவெடுக்கின்றன. அரண்மனை விருந்தாளிகளை எப்படி நடத்தவேண்டுமென்று இவர்களுக்குப் பாடம் கற்பிக்கிறேன்!" என்றான் நமது வீரன்.

சின்னப் பழுவேட்டரையர் புன்னகை புரிந்து, "தம்பி! உன் தோள் தினவைத் தீர்த்துக் கொள்வதைச் சோழப் பகைவர்களோடேயே வைத்துக் கொள்! சக்கரவர்த்தி நோய்ப்பட்டிருக்கும் நிலையில் தஞ்சைக் கோட்டைக்குள் இவ்விதச் சண்டை, சந்தடி ஒன்றும் உதவாது என்று கட்டளை!" என்று சொன்னார்.

"அப்படியானால் என்னுடைய உடைகளையும் உடைமைகளையும் உடனே கொண்டு வந்து கொடுக்கச் சொல்லுங்கள்!"

"எங்கேடா அவை?"

"எஜமான்! தங்கள் கட்டளைப்படி பத்திரப்படுத்தி வைத்திருக்கிறோம்."

"தளபதி! இவர்கள் எப்படிப் புளுகுகிறார்கள், பாருங்கள்! சற்று முன் உடைகளை வெளுக்கப் போட்டிருப்பதாய்ச் சொன்னார்கள். இப்போது தாங்கள் 'பத்திரப்படுத்தி' வைக்கச் சொன்னதாகக் கூறுகிறார்கள். சற்றுப் போனால் தங்களுக்கே திரும்பிப் பட்டம்கூடக் கட்டிவிடுவார்கள்!" என்றான் வந்தியத்தேவன்.

தளபதி காவலர்களைப் பார்த்து, "மூட்டாள்களா! இந்தப் பிள்ளைக்குப் புது உடைகள் கொடுக்கும்படி மட்டுந்தானே சொன்னேன்? பழையவைகளைப் பற்றி நான் ஒன்றுமே சொல்லவில்லையே?...இந்த மூடர்கள் என்னவோ உளறுகிறார்கள், தம்பி! போனால் போகட்டும்; பழைய உடையைப் பற்றி எதற்காக இவ்வளவு கவலைப் படுகிறாய்? அதற்குள் ஏதாவது உயர்ந்த பொருள் வைத்திருந்தாயோ?" என்று கேட்டார்.

"ஆம்; வழிநடைச் செலவுக்காகப் பொற் காசுகள் வைத்திருந்தேன்..." என்று வந்தியத்தேவன் சொல்வதற்குள், "அதற்காக நீ கவலைப்பட வேண்டாம். உனக்கு வழிச் செலவுக்கு எவ்வளவு பொன் வேண்டுமோ அவ்வளவு தருகிறேன்!" என்றார் பழுவேட்டரையர்.

"தளபதி! நான் இளவரசர் கரிகாலருடைய தூதன். பிறரிடம் கை நீட்டிப் பணம் பெறும் வழக்கம் என்னிடம் கிடையாது......"

"அப்படியானால், உன்னுடைய உடைகளையும் அதற்குள்ளிருந்த பொற்காசுகளையும் திருப்பி உன்னிடம் சேர்ப்பிக்கச் செய்கிறேன். கவலைப் படாதே! உன் உடையில் வேறு பொருள் ஒன்றும் இல்லையல்லவா?"

வல்லவரையன் ஒரு கணம் யோசித்தான். அந்தத் தயக்கத்தைச் சின்னப் பழுவேட்டரையரும் பார்த்துக் கொண்டார்.

"வேறொரு முக்கியமான பொருளும் என் அரைச் சுற்று ஆடையில் இருக்கிறது. அதை உங்கள் ஆட்கள் தொட்டிருக்க மாட்டார்கள் என்று நினைக்கிறேன். தொட்டிருந்தால் அவர்கள் தொலைந்தார்கள்!......"

"ஆகா! உனக்கு எத்தனை கோபம் வருகிறது? எங்கே, யாரிடத்தில் பேசுகிறோம் என்பதை மறந்துவிட்டே பேசுகிறாய். சிறு பிள்ளையாயிற்றே என்று மன்னித்து விடுகிறேன். அப்படிப்பட்ட பொருள் என்ன?"

"தளபதி! அதைச் சொல்வதற்கு இல்லை. அது அந்தரங்க விஷயம்!"

"தஞ்சைக் கோட்டைக்குள் எனக்குத் தெரியாத அந்தரங்கம் ஒன்றும் இருக்க முடியாது!"

"இளவரசர் கரிகாலர் என்னிடம் ஒப்புவித்த அந்தரங்க விஷயம்."

"இளவரசர் வடதிசையின் மாதண்ட நாயகர். அவருடைய அதிகாரம் பாலாற்றுக்கு வடக்கே செல்லும். இங்கே சக்கரவர்த்தியின் அதிகாரந்தான் செல்லும்!"

"தளபதி! புலிக் கொடி பறக்கும் இடமெல்லாம் சக்கரவர்த்தியின் அதிகாரந்தான். அதில் என்ன சந்தேகம்?"

"ஆகையினால்தான், இந்தக் கோட்டைக்குள்ளே எனக்குத் தெரியாத அந்தரங்கம் எதுவும் இருக்க முடியாது

என்று சொல்லுகிறேன். சக்கரவர்த்தியின் க்ஷேமத்தைக் கருதித்தான்!"

"தளபதி! சக்கரவர்த்தியைக் கண்ணும் கருத்துமாய்க் காப்பாற்றி வருவதற்காகத் தங்களுக்கும் பெரிய பழுவேட்டரையருக்கும் சோழ சாம்ராஜ்யம் நன்றிக் கடன் பட்டிருக்கிறது. இன்றைக்குச் சக்கரவர்த்தி தங்களைப் பாராட்டியதும் என் காதில் விழுந்தது. தங்களுக்குப் பயந்து கொண்டுதான் யமன் தஞ்சைக் கோட்டைக்குள் புகுந்து வராமல் தயங்கிக் கொண்டிருக்கிறான் என்று சக்கரவர்த்தி சொன்னாரே? அது எவ்வளவு பொருள் பொதிந்த வார்த்தை!"

"ஆம், தம்பி! பழையாறையிலிருந்து சக்கரவர்த்தியை நாங்கள் இங்கே அழைத்து வந்து கட்டுக் காவலுக்குள் வைத்திராவிட்டால், இத்தனை நாளும் என்ன விபரீதம் நடந்திருக்குமோ, தெரியாது. பாண்டிய நாட்டுச் சதிகாரர்களின் நோக்கம் நிறைவேறியிருந்தாலும் இருக்கலாம்."

"ஆ! தாங்கள் கூட அவ்விதமே சொல்கிறீர்களே! அப்படியானால் நான் கேள்விப்பட்டது உண்மையாகத்தான் இருக்க வேண்டும்!"

"என்ன கேள்விப்பட்டாய்?"

"சக்கரவர்த்திக்கு விரோதமாக ஒரு சதி நடக்கிறதென்றும், சக்கரவர்த்தியின் திருக் குமாரர்களுக்கு விரோதமாக இன்னொரு சதி நடக்கிறதென்றும் கேள்விப்பட்டேன்."

சின்னப் பழுவேட்டரையர் தம் வஜ்ரப் பற்களினால் உதட்டைக் கடித்துக் கொண்டார். இந்தச் சிறு அறியாப் பையனுடன் பேச்சுக் கொடுத்ததில் தமக்கே இத்தனை நேரமும் தோல்வி என்பதை உணர்ந்தார். ஏறக்குறைய அவனுடைய குற்றச் சாட்டுகளுக்குத் தாம் பதில் சொல்லிச் சமாளிக்கும் நிலைமைக்கு வந்துவிட்டது! எனவே, பேச்சை அத்துடன் வெட்டிவிட விரும்பினார்.

"உனக்கென்ன அதைப் பற்றிக் கவலை? எல்லாச் சதிகளையும் உடைத்துச் சோழ குலத்தைப் பாதுகாக்க நாங்கள் இருக்கிறோம். உன்னுடைய கோரிக்கையைச் சொல்லு. உன் பழைய ஆடைகள் உனக்கு வேண்டும்; அவ்வளவுதானே!" என்றார்.

"என் பழைய ஆடைகளும் வேண்டும்; அவற்றுக்குள் இருந்த பொருள்களும் வேண்டும்."

"என்ன பொருள்கள் என்று இன்னமும் நீ சொல்லவில்லையே!"

"சொல்லத்தான் வேண்டுமானால் சொல்லுகிறேன். அதன் பொறுப்பு தங்களைச் சார்ந்தது. இளவரசர் சக்கரவர்த்திக்குக் கொடுத்திருந்த ஓலையைத் தவிர இன்னொரு ஓலையும் என்னிடம் கொடுத்திருந்தார்......"

"இன்னொரு ஓலையா! யாருக்கு? நீ சொல்லவே இல்லையே!"

"அந்தரங்கமானபடியால் சொல்லவில்லை; நீங்கள் இப்போது வற்புறுத்துகிறபடியால் சொல்லுகிறேன். பழையாறையிலுள்ள இளைய பிராட்டி குந்தவை தேவிக்கு இளவரசர் ஓலை ஒன்று கொடுத்தார்!..."

"ஓஹோ! அப்படியானால், நாளைக்குச் சக்கரவர்த்தி கொடுக்கும் திருமுகத்தை நீ உடனே எடுத்துக் கொண்டு காஞ்சிக்குப் போக முடியாது. இளைய பிராட்டிக்கு இளவரசர் ஓலை அனுப்பும்படி இப்போது என்ன அவசரம் நேர்ந்ததோ?"

"தளபதி! நான் பிறருக்கு எழுதப்படும் ஓலையைப் படிப்பதில்லை. சக்கரவர்த்தியின் ஓலையைப் படித்ததுபோல் இதையும் நீங்கள் படிப்பதில் எனக்கு ஒன்றும் ஆட்சேபம் கிடையாது. அந்தப் பொறுப்பு தங்களுடையது. என் உடையிலிருந்த பொன்னும் ஓலையும் களவு போகாமல் என்னிடம் திரும்பி வந்தால் போதும்."

"அதைப் பற்றிப் பயம் வேண்டாம். நானே பார்த்து எடுத்து வருகிறேன்" என்று சின்னப் பழுவேட்டரையர் நடந்தார். அவர் பின்னோடு வந்தியத்தேவனும் தொடர்ந்தான். அதை யறிந்த கோட்டைத் தளபதி கண்களினால் சமிக்ஞை செய்யவே ஐந்தாறு வேல் பிடித்த வீரர்கள் வந்து வாசற்படியண்டை குறுக்கே நின்றார்கள். அவர்களுடன் சண்டை பிடிப்பதில் அனுகூலம் ஒன்றுமில்லையென்று கருதி வந்தியத்தேவன் அங்கேயே நின்றான்.

சற்று நேரத்துக்கெல்லாம் சின்னப் பழுவேட்டரையர் திரும்பி வந்தார். அவருக்குப் பின்னால் ஒருவன் ஒரு தட்டில் சீர்வரிசை ஏந்திக்கொண்டு

வருவதுபோல் வந்தியத்தேவனுடைய பழைய ஆடைகளை எடுத்து வந்தான்.

"தம்பி! இதோ உன் ஆடைகள் பத்திரமாயிருக்கின்றன. நன்றாகச் சோதனை செய்து பார்த்துக் கொள்!" என்றார் கோட்டைத் தளபதி.

அவ்விதமே வந்தியத்தேவன் சோதனை செய்து பார்த்தான். அரைச் சுற்றுச் சுருளில் அவன் வைத்திருந்ததைக் காட்டிலும் அதிகமாகப் பொற்காசுகள் இருந்தன. குந்தவை தேவியிடம் சேர்ப்பிக்கவேண்டிய ஓலையும் இருந்தது. அதிக பொற்காசுகள் எப்படி வந்தன? முதலில் அவன் தேடிப் பார்த்தபோது இல்லாத ஓலை இப்போது எப்படி வந்தது? சின்னப் பழுவேட்டரையரிடம் அது அகப்பட்டிருக்கவேண்டும். அதைப் பார்த்துவிட்டு இப்போது திரும்பி வந்த பிறகு அவர் அந்த ஓலையைத் திரும்பச் செருகியிருக்க வேண்டும்! எதற்காக இப்படிச் செய்திருக்கிறார்? பொற்காசுகள் எதற்காக அதிகம் வைத்திருக்கிறார்? பொல்லாத மனிதர் இவர்! இன்னும் எப்படியெல்லாம் தன்னைச் சோதிக்கப் போகிறாரோ, தெரியாது! இவரிடம் சர்வ ஜாக்கிரதையாக நடந்து கொள்ளவேண்டும். ஏமாந்து போகக்கூடாது!

"எல்லாம் சரியாயிருக்கிறதா, தம்பி! நீ கொண்டு வந்த பொன், பொருள் எல்லாம்?" என்று சின்னப் பழுவேட்டரையர் கேட்டார்.

"இதோ பார்த்துச் சொல்கிறேன்" என்று கூறி வந்தியத்தேவன் பொற்காசுகளை எண்ணினான். அதிகப்படி காசுகளை எடுத்துத் தனியாகப் பழுவேட்டரையர் முன்பு வைத்துவிட்டு, "தளபதி! வாணர் குலத்தில் பிறந்தவன் நான்; ஆதித்த கரிகாலரின் தூதன்; பிறர் பொருளுக்கு ஆசைப்படுவதில்லை!" என்றான்.

"உன்னுடைய நேர்மையை மிக மெச்சுகிறேன். ஆயினும் உன்னுடைய வழிச் செலவுக்கு இதை நீ வைத்துக் கொள்ளலாம்! எப்போது புறப்பட விரும்புகிறாய்? இன்றைக்கே புறப்படுகிறாயா? அல்லது இன்றிரவு தங்கி இளைப்பாறிவிட்டு, பெரியவரையும் பார்த்துவிட்டுப் போகிறாயா?" என்று கேட்டார் தளபதி.

"அவசியம் இன்றிரவு இங்கே தங்கிப் பெரிய பழுவேட்டரையரையும் தரிசித்து விட்டுத்தான் போக எண்ணியிருக்கிறேன். ஆனால் உங்கள் ஆட்களிடம் மட்டும் கொஞ்சம் சொல்லி வையுங்கள்; என் பொருள்களில் கை வைக்க வேண்டாம் என்று!"—இவ்விதம் சொல்லிக் கொண்டே அதிகப்படியாயிருந்த பொற்காசுகளையும் வந்தியத்தேவன் எடுத்துத் துணிச்சுருளில் பத்திரப்படுத்திக் கொண்டான்.

"மிக்க சந்தோஷம். உனக்கு இங்கே எந்தவிதமான இடைஞ்சல்களும் இனிமேல் இராது. உனக்கு என்ன வேண்டுமோ, தாராளமாய்க் கேட்டுப் பெற்றுக் கொள்ளலாம்."

"தளபதி! இந்தத் தஞ்சை நகரைச் சுற்றிப் பார்க்க வேண்டும் என்று எனக்கு ஆசையாயிருக்கிறது. பார்க்கலாம் அல்லவா?"

"தாராளமாகப் பார்க்கலாம். இதோ இவர்கள் இருவரும் உன்னோடு வந்து கோட்டைக்குள் எல்லா இடங்களையும் காட்டுவார்கள். கோட்டைக்கு வெளியில் மட்டும் போகவேண்டாம். சாயங்காலம் கோட்டைக் கதவுகளைச் சாத்திவிடுவார்கள்! வெளியில் போய்விட்டால் திரும்பி இரவு வரமுடியாது. கோட்டைக்குள்ளே உன் விருப்பப்படி சுற்றி அலையலாம்!"—இவ்விதம் கூறிவிட்டு இரண்டு புதிய ஆட்களைச் சின்னப் பழுவேட்டரையர் தன் அருகில் அழைத்து அவர்களிடம் பொதுவாக ஏதோ சொன்னார். அவர் சொன்னது என்னவாயிருக்கும் என்று வந்தியத்தேவன் ஒருவாறு ஊகித்துத் தெரிந்து கொண்டான்.

## அத்தியாயம் 33

# மரத்தில் ஒரு மங்கை

கோட்டைத் தளபதியின் இரு ஆட்களும் தன் இரண்டு பக்கத்தில் வர, வந்தியத்தேவன் தஞ்சைக் கோட்டையைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டான். தான் தப்பித்து ஓடிவிடாமல் பார்த்துக் கொள்ளவே அவர்கள் தன்னுடன் வருகிறார்கள் என்பதைப்பற்றி அவனுக்குச் சந்தேகம் இருக்கவில்லை.

கோட்டை வாசல் வழியாக வெளியே யாரையும் போக விடாமல் பார்த்துக் கொள்ளும்படி கட்டளை பிறந்திருக்கும் என்பதிலும் ஐயமில்லை. ஆனாலும் அவன் அன்று முன்னிரவுக்குள் தப்பித்துச் சென்றே தீரவேண்டும். பெரிய பழுவேட்டரையர் வந்து விட்டால், பிறகு தப்பிச் செல்வது இயலாத காரியம்; உயிர் பிழைத்திருப்பதே முடியாத காரியமாகி விடும்!

ஆகவே, தஞ்சாவூர்க் கோட்டைக்குள் வந்தியத்தேவன் அங்குமிங்கும் அலைந்து வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது அவனுடைய மனம் தப்பிச் செல்லும் வழிகளைப் பற்றி ஆலோசித்துக் கொண்டேயிருந்தது. முதலில் இந்த யமகிங்கரர்களிடமிருந்து தப்பவேண்டும்; பின்னர், கோட்டையிலிருந்து தப்பிச் செல்ல வேண்டும். எப்படித் தப்புவது? அதுதான் தெரியவில்லை.

பார்க்கப் போனால் இவர்களிடமிருந்து தப்புவது பெரிய காரியமில்லை. இரண்டு பேரையும் ஒரு விநாடி நேரத்தில் தாக்கிக் கீழே தள்ளிவிட்டு ஓடிவிடலாம். ஆனால் எங்கே ஓடுவது? தஞ்சைக் கோட்டையைப் பழுவேட்டரையர்கள் எவ்வளவு பலப்படுத்திக் கட்டியிருக்கிறார்கள் என்பது நாடறிந்த செய்தி. அவர்களுடைய அநுமதியின்றித் தஞ்சைக் கோட்டைக்குள் காற்றுக்கூட நுழைய முடியாது என்று ஜனங்கள் சொல்லுவார்கள். யமனும் வரமுடியாது என்று சக்கரவர்த்தியே இன்று காலையில் சொன்னார். அத்தகைய கோட்டையிலிருந்து எப்படிச் செல்வது? இந்த இருவரையும் தொட வேண்டியதுதான்; அவர்கள் உடனே கூச்சல் கிளப்பி விடுவார்கள். அடுத்த கணத்தில் தான் பாதாளச் சிறைக்குப் போக நேரிடும். அல்லது உயிரிழக்க நேரிடும். இவர்களைத் தாக்குவதில் பயனில்லை; தாக்காமல் தந்திரத்தினாலேயே தப்பிக்க வேண்டும். அப்படித் தப்பித்த பிறகு கோட்டையிலிருந்து வெளியேற வழி தேடவேண்டும். எவ்வளவு பலமான கோட்டையாயிருந்தாலும் இரகசியச் சுரங்க வழி இல்லாமற் போகாது. அதை எப்படிக் கண்டுபிடிப்பது? அது யாருக்குத் தெரிந்திருக்கும்? தெரிந்தவர்கள் யாரேனும் இருந்தாலும், தனக்குச் சொல்வார்களா?

இப்படிப் பலவகையாகச் சிந்தித்துக் கொண்டே நடந்தபோது, சட்டென்று பழுவூர் இளைய ராணியின் நினைவு வந்தது. ஆகா! அந்தக் கோட்டைக்குள் யாராவது தனக்கு உதவி செய்வதாயிருந்தால், அந்த மாதரசிதான் செய்யக்கூடும். அதுவும் சந்தேகந்தான். ஆனால் ஆழ்வார்க்கடியானின் பெயரைச் சொல்லி ஏதேனும் தந்திர மந்திரம் செய்து பார்க்கலாம். அப்படிப் பார்ப்பதற்கு முதலில் பெரிய பழுவேட்டரையரின் அரண்மனையைக் கண்டு பிடிக்கவேண்டும். கண்டு பிடித்தாலும், தான் அங்கே ராணியைப் பார்க்கச் செல்வது இந்தத் தடியர்களுக்குத் தெரியக்கூடாது. தெரிந்தால் இவர்கள் போய்ச் சின்னப் பழுவேட்டரையரிடம் சொல்லி விடுவார்கள். அதிலிருந்து என்ன விபரீதம் நேருமோ, யார் கண்டது? ஒருவேளை, பெரிய பழுவேட்டரையர் அரண்மனையில் இருக்கும்போது அவரே வந்துவிட்டால் என்ன செய்வது? சிங்கத்தின் குகைக்குள் நாமாகச் சென்று தலையைக் கொடுப்பதுபோல ஆகுமே?

**வ**ந்தியத்தேவனுடைய மனம் சிந்தித்துக் கொண்டிருந்தபோது அவனுடைய வாயும் கண்களும் சும்மா இருந்து விடவில்லை. பின்னோடு வந்தவர்களை "அது என்ன? இது என்ன?" "அது யார் அரண்மனை?" "இது யார் மாளிகை?" "இது என்ன கட்டிடம்?" "அது என்ன கோபுரம்?" என்றெல்லாம் அவன் வாய் கேட்டுக் கொண்டேயிருந்தது. அவனுடைய காதுகள் "இது பெரிய பழுவேட்டரையர் அரண்மனை" அல்லது "பழுவூர் இளைய ராணி அரண்மனை" என்ற மறுமொழி வருகிறதா என்று கூர்ந்து கவனித்துக் கொண்டேயிருந்தன. அவனுடைய கண்களோ அப்புறமும் இப்புறமும் நாலாபுறமும் கவனமாகப் பார்த்துக் கொண்டு வந்தன. அப்படிப் பார்த்து வந்தபோது ஒரு விஷயம் அவன் கண்கள் வழியாக மனதில் நன்கு பதிந்தது. கோட்டைக்குள்ளே பிரதான வீதிகள் விசாலமாயும் ஜனப்போக்கு வரவு நிறைந்ததாயும் இருந்த போதிலும் சந்து பொந்துகளும் ஏராளமாயிருந்தன. மரமடர்ந்த தோட்டங்களும் அதிகமாயிருந்தன. அந்தச் சந்து பொந்துகளின் வழியாகச் சென்று அடர்ந்த தோட்டங்களுக்குள் புகுந்து

மறைந்து கொள்வது அசாத்தியமான காரியம் அல்ல. ஒரு நாள், இரண்டு நாள் கூடத் தலைமறைவாக இருப்பது சாத்தியந்தான். ஆனால் யாரும் பாராத சமயத்தில் மறைந்து கொள்ள வேண்டும்; யாரும் தேடாமலும் இருக்கவேண்டும். சின்னப் பழுவேட்டரையர் அவருடைய கணக்கற்ற ஆட்களைத் தேடுவதற்கு ஏவி விட்டால் மறைந்திருப்பது சாத்தியமல்ல. அல்லது யாருடைய வீட்டுக்குள்ளாவது புகுந்து அடைக்கலம் பெற வேண்டும். அம்மாதிரி தஞ்சைக் கோட்டைக்குள் தனக்கு அடைக்கலம் யார் கொடுப்பார்கள்? பழுவூர் ராணி கொடுத்தால் தான் கொடுத்தது. தன்னுடைய கற்பனா சக்தியையெல்லாம் பிரயோகித்து அவளிடம் கதை கட்டிச் சொல்லி நம்பும்படி செய்யவேண்டும். அதற்கு முதலில், இவர்களிடமிருந்து தப்பித்து நழுவவேண்டும்...

ஆகா! இது என்ன கோஷம்? இது என்ன ஆர்ப்பாட்டம்? —ஓ! இவ்வளவு கூட்டமாகப் போகிறார்களே இவர்கள் யார்? தெய்வமே! நீ என் பக்கத்தில் இருக்கிறாய் என்பதில் சந்தேகமில்லை. இதோ ஒரு வழி புலப்படுகிறது! இதோ ஒரு துணை தோன்றுகிறது!...

குறுக்கு வீதியில் ஒரு திருப்பத்துக்கு வந்ததும், பிரதான வீதி வழியாக ஒரு பெரிய கும்பல் வாத்திய கோஷ ஜய கோஷ முழக்கங்களுடன் போய்க் கொண்டிருந்ததைப் பார்த்து வந்தியத்தேவன் மேற்கண்டவாறு நினைத்தான். அந்தக் கும்பலில் சென்றவர்கள் வேளக்காரப் படையினர் என்பதைத் தெரிந்து கொண்டான். வழக்கம்போல் மகாராஜாவைத் தரிசனம் செய்து விட்டு அவர்கள் கோட்டையைவிட்டு வெளியேறுகின்றார்கள் போலும்! இந்தக் கூட்டத்தில் தானும் கலந்து விட்டால்?......ஆகா! தப்புவதற்கு இதைக் காட்டிலும் வேறு சிறந்த உபாயம் என்ன?

பின்னோடு வருகிறவர்கள் அவ்வளவு சுலபத்தில் தன்னை விட்டுவிட மாட்டார்கள். தான் கூட்டத்தில் கலந்தால் அவர்களும் கூடத் தொடர்ந்து வருவார்கள். கோட்டை வாசல் வழியாக வெளியேறவும் எளிதாயிராது! வாசற் காவல் செய்வோர் அவ்வளவு ஏமாந்தவர்களாக இருந்து விடுவார்களா? தன்னைக் கண்டு பிடித்துத் தடுத்து நிறுத்தி விட மாட்டார்களா?...ஆயினும் ஒரு பிரயத்தனம் செய்து பார்க்க வேண்டியதுதான். வேறு வழியில்லை. கடவுளே பார்த்துக் காட்டியிருக்கும் இந்த வழியை உபயோகித்துக் கொள்ளாவிட்டால் தன்னைப்போன்ற மூடன் வேறு யாரும் இல்லை.

வழக்கம்போல், பின்னோடு வந்தவர்களைப் பார்த்து, "இது என்ன கூட்டம்?" என்று வந்தியத்தேவன் கேட்டான். "வேளக்காரப் படை" என்று சொன்னதும், அந்தப் படையைப்பற்றிய விவரங்களைக் கேட்கலானான். அத்தகைய வீரப்படையில் தானும் சேர்ந்துவிட விரும்புவதாகவும், ஆகையால் நெருங்கிப் பார்க்க வேண்டுமென்றும் சொன்னான். இப்படியெல்லாம் பேசிக்கொண்டே வேளக்காரப்படையை அணுகினான். சிறிது நேரத்தில் "முன்னால் தாரை தப்பட்டை முழக்குகிறவர்களைப் பார்க்க வேண்டும்" என்று சொல்லிக் கொண்டே வேளக்காரப் படைக் கூட்டத்தில் கலந்து விட்டான்.

கூட்டம் மேலே போகப் போக, இவனும் ஒரே இடத்தில் நில்லாமல் மேலும் கீழும் அப்பாலும் இப்பாலும் நகர்ந்து கொண்டிருந்தான். வேளக்காரப்படை வீரர்களைக் காட்டிலும் அதிக உற்சாகத்துடன் கோஷங்களைச் செய்தான். அவ்வீரர்களில் சிலர் இவனை உற்று உற்றுப் பார்த்தார்கள். "இவன் யார் பைத்தியக்காரன்?" என்ற பாவனையில் சிலர் பார்த்தார்கள். "மிதமிஞ்சி மதுபானம் செய்தவன் போலிருக்கிறது!" என்ற பாவனையில் சிலர் பார்த்தார்கள். ஆனால் யாரும் அவனைத் தடுக்கவோ, அப்புறப்படுத்தவோ முயலவில்லை.

அவனுடன் வந்த சின்னப் பழுவேட்டரையரின் ஆட்களோ, வேளக்காரப் படைக்குள் நுழையத் துணியவில்லை. "எப்படியும் அவன் வெளியில் வருவான், அப்போது மீண்டும் பற்றிக் கொள்ளலாம்" என்ற நம்பிக்கையுடன் வேளக்காரப் படையின் ஓரமாகச் சற்று விலகியே அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள்.

அச்சமயம் வீதியில் எதிர்ப்புறமாகத் தயிர்க் கூடையுடன் வந்து கொண்டிருந்த ஒரு ஸ்திரீ வேளக்-

காரப்படைக்கு ஒதுங்கி ஒரு சந்தில் நின்றாள். அந்த வீரர்களில் ஒருவன், "அம்மா! தாகமாயிருக்கிறது; கொஞ்சம் தயிர் தருகிறாயா?" என்று கேட்டான். அந்தப் பெண் துடுக்காக, "தயிர் இல்லை; கன்னத்தில் இரண்டு அறை வேணுமானால் தருகிறேன்!" என்றாள்.

அதைக் கேட்ட ஒரு வீரன் "ஓகோ! அதைத்தான் கொடுத்துவிட்டுப் போ!" என்று அந்தப் பெண்ணை அணுகிச் சென்றான். தயிர்க்காரப் பெண் பயந்து ஓடினாள். வீரன் அவளைத் தொடர்ந்து ஓடினான். அவனைப் பிடித்துக் கொண்டு வருவதற்காக இன்னும் இரண்டு வீரர்கள் ஓடினார்கள். ஓடியவர்கள் அனைவரும் தலைக்குத் தலை ஒவ்வொரு விதமாகக் கூச்சல் போட்டுக் கொண்டு ஓடியபடியால் விஷயம் என்னவென்பதே யாருக்கும் தெரியவில்லை. ஏதோ தமாஷ் என்று மட்டும் எல்லாரும் எண்ணினார்கள்.



இதையெல்லாம் பார்த்துக் கொண்டிருந்தான் வல்லவரையன். அந்த ஒரு கணத்தில் அவன் மனதிற்குள் தீர்மானத்துக்கு வந்து விட்டான். தீர்மானிப்பதும் தீர்மானத்தைக் காரியத்தில் நிறைவேற்றுவதும் வந்தியத் தேவனுக்கு ஒன்றுதான் என்பதை நாம் ஏற்கனவே பல முறை பார்த்திருக்கிறோம். தீர்மானித்த பிறகு தயங்குவதென்பது அவனுடைய இயற்கைக்கு விரோதமானது. எனவே, ''ஓடு! ஓடு!'' ''பிடி! பிடி!'' என்று கூவிக் கொண்டே வந்தியத்தேவனும், தயிர்க்காரப் பெண்ணைத் துரத்திக்கொண்டு ஓடியவர்களைத் தொடர்ந்து தானும் ஓடினான். அந்தப் பெண் சற்றுத் தூரம் ஓடி ஒரு குறுகிய சந்தில் திரும்பினாள். பின் தொடர்ந்து ஓடியவர்கள் அங்கே போய்ப் பார்த்தபோது தயிர்க்காரப் பெண்ணைக் காணவில்லை. மாயமாய் மறைந்து விட்டாள்! துரத்திவந்த வீரர்களும் அவளைப் பற்றி அப்புறம் கவலைப்படவில்லை; திரும்பி விட்டார்கள். வந்தியத்தேவன் மட்டும் திரும்பவில்லை. அந்தப் பெண் புகுந்து சென்ற சந்து வழியாகவே மேலும் ஓடினான். இன்னும் இரண்டு மூன்று சந்துகள் புகுந்து திரும்பிய பிறகே ஓட்டத்தை நிறுத்தி மெதுவாக நடக்கலுற்றான்.

வேளைக்காரப் படைச் சாதாரணமாகக் கோட்டையிலிருந்து வெளியேறும் நேரம் சூரியாஸ்தமன நேரம் அல்லவா? வந்தியத்தேவன் இப்போது புகுந்து சென்ற சந்துகளில் ஏற்கனவே இருள் சூழ்ந்துவிட்டது. இருபுறமும் சில இடங்களில் மதின் சுவராயிருந்தது. சில இடங்களில் செடி கொடிகள் அடர்ந்த வேலியாயிருந்தது. வந்தியத்தேவன் எங்கும் நிற்காமல் போய்க்கொண்டேயிருந்தான். திசையைப்பற்றி அவன் கவலைப்படவில்லை. பெரிய வீதிகளில் புகாமல் சந்து பொந்துகளின் வழியாகப் புகுந்து போனால் எப்படியும் கோட்டை வெளிச் சுவரை அடைந்தே தீரவேண்டும். கோட்டைச் சுவரை அடைந்த பிறகு என்ன செய்வது என்பதைப் பிறகு தீர்மானித்துக் கொள்ளலாம். யோசித்து யுக்திகள் கண்டு பிடிப்பதற்குத்தான் இரவெல்லாம் நேரம் இருக்கிறதே!

சற்று நேரத்துக்கெல்லாம் நன்றாக இருட்டிவிட்டது. அவன் சென்ற பாதை கடைசியில் ஒரு மதின் சுவரில் வந்து முடிந்தது. இருட்டில் நடந்து வந்த வந்தியத் தேவன் அச்சுவரின்மேல் இலேசாக மோதிக் கொண்டான். சுவர் என்று மட்டும் தெரிந்தது. அது என்ன சுவர், எவ்வளவு உயரமான சுவர் என்பது ஒன்றும் தெரியவில்லை. அநேகமாக அது கோட்டை மதின் சுவராகவே இருக்கலாம். அப்படியானால் இங்கேயே உட்கார்ந்து விடுவதுதான் சரி. சிறிது நேரத்துக்கெல்லாம் சந்திர உதயம் ஆகும். அப்போது பார்த்துத் தெரிந்து கொள்ளலாம். அதுவரை ஒளிந்திருப்பதற்கு இதைக் காட்டிலும் நல்ல இடம் இருக்க முடியாது. இத்தனை நேரம் சின்னப் பழுவேட்டரையரின் ஆட்கள் திரும்பிப் போய்ச் சொல்லியிருப்பார்கள். கோட்டைத் தளபதி தன்னுடைய ஆட்களை நாலா புறமும் ஏவியிருப்பார். ஒருவேளை வேளைக்காரப் படையுடன் தான் வெளியேறியிருக்கலாம் என்றும் சந்தேகித்திருப்பார். கோட்டைக்கு உள்ளேயும் வெளியிலேயும் தன்னைத் தேடிக் கொண்டிருப்பார்கள். தேடட்டும்; தேடட்டும்; நன்றாய்த் தேடட்டும். அவர்களையெல்லாம் ஏமாற்றி விட்டு நான் இக்கோட்டையை விட்டுத் தப்பித்துச் செல்லா விட்டால் நான் வாணர் குலத்தவன் அல்ல! என் பெயரும் வந்தியத்தேவன் அல்ல!

ஆனால் சந்திரன் உதயமாகி நிலா அடிக்கத் தொடங்கி விட்டால் பழுவேட்டரையர் ஆள்களுக்கும் வசதியாகப்போய்விடும். தன்னைத்தேடி இங்கே வந்தாலும் வந்துவிடுவார்கள். வந்தால் வரட்டும்; தாராளமாய் வரட்டும்; இந்த அடர்ந்த தோப்புகளுக்குள் ஒளிந்து கொண்டால் யார்தான் தேடிக் கண்டு பிடிக்க முடியும்?...

இப்படி எண்ணிக் கொண்டே சுவரின்மீது சாய்ந்து கொண்டு, வந்தியத் தேவன் உட்கார்ந்தான். இளம்பிள்ளையாதலாலும் பகலெல்லாம் அலைந்து களைத்திருந்தபடியாலும் கண்ணைச் சுழற்றிக் கொண்டு தூக்கம் வந்தது. மேலக்காற்றில் மரக்கிளைகள் ஆடி ஒன்றோடொன்று உராய்ந்து உண்டாக்கிய சத்தம் தாலாட்டுப் பாட

லைப்போல் மயக்கத்தை உண்டுபண்ணியது. அப்படியே தூங்கிவிட்டான்.

அவன் தூக்கம் நீங்கிக் கண் விழித்த போது சந்திரன் உதயமாகிக் கீழ் வானத்தில் சிறிது தூரம் மேலே வந்திருந்தது. அடர்ந்த மரக் கிளைகளின் வழியாக நிலா வெளிச்சம் வந்து சுற்றுப்புறக் காட்சிகளை அரைகுறையாக அவனுக்குக் காட்டியது. தனது நிலை என்ன வென்பதை வந்தியத் தேவன் ஞாபகப் படுத்திக் கொண்டான். சுவரில் சாய்ந்தபடி தான் தூங்கிவிட்டது அவனுக்கு வியப்பை அளித்தது. அதைக் காட்டிலும் துயில் நீங்கி விழித்துக் கொண்டது ஆச்சரியம் அளித்தது. தன்னுடைய துயிலை நீக்கி விழிக்கச் செய்த காரணம் யாது? ஏதோ ஒரு குரல் கேட்டது போல் தோன்றியதே? அது மனிதக் குரலா? அல்லது விலங்கின் குரலா? அல்லது இரவில் விழித்திருக்கும் பறவையின் குரலா? — குரல் கேட்டது தான் உண்மையா?

வந்தியத்தேவன் அண்ணாந்து பார்த்தான். அரைகுறையான நிலா வெளிச்சத்தில் செங்குத்தான சுவர் தெரிந்தது. ஆ! இது கோட்டைச் சுவராயிருக்க முடியாது. கோட்டைச் சுவர் இன்னும் உயரமாயிருக்கும். ஒரு வேளை வெளிக் கோட்டைச் சுவருக்குள்ளே இன்னொரு சிறிய கோட்டைச் சுவராக இருக்குமோ? அல்லது பெரியதொரு அரண்மனைத் தோட்டத்தின் மதிள் சுவரோ?

அண்ணாந்து பார்த்துக் கொண்டே வந்தியத் தேவன் எழுந்தான். ஒரு கணம் அவனுடைய இருதயத் துடிப்பு நின்று போயிற்று. வயிற்றிலுள்ள குடல் மேலே மார்பு வரை விம்மி வந்து அடைத்தது. அவ்வளவு பீதி உண்டாயிற்று. அதோ அந்த மதிள் சுவருக்கு மேலேயுள்ள மரக் கிளையில் இருப்பது என்ன? மரங்களில் வசிக்கும் வேதாளம் என்னும் பிசாசைப் பற்றி அவன் கேட்டிருந்த கதைகள் பலவும் நினைவுக்கு வந்தன.

ஆனால் வேதாளம் பேசுமா? மனிதக் குரலில் பேசுமா? அதுவும் பெண்ணின் குரலில் பேசுமா? இந்த வேதாளம் அவ்வாறு பேசுகிறதே? என்ன சொல்கிறது என்று கேட்கலாம்.

"என்ன ஐயா! சுவரில் சாய்ந்தபடி தூங்கிவிட்டாயா? எத்தனை தடவை கூப்பிடுகிறது?"

ஆ! இது வேதாளம் அல்ல. மனித குலத்துப் பெண்மணிதான் பேசுகிறாள். மரக் கிளையின் மீது உட்கார்ந்திருப்பவள் ஒரு பெண்மணிதான்! இது என்ன கனவா? அல்லது உண்மையில் நடப்பதா?

"அழகுதான்! இன்னும் தூக்கம் கலையவில்லை போலிருக்கிறது. இதோ ஏணியை வைக்கிறேன். ஜாக்கிரதையாக ஏறி வா! கீழே விழுந்து தொலைக்காதே!"

இப்படிச் சொல்லிக் கொண்டே அப்பெண் சுவரின் உட்புறத்திலிருந்து மெல்லிய மூங்கிலினால் ஆன ஏணி ஒன்றை எடுத்து வெளிப்புறத்தில் சுவர் ஓரமாக வைத்தாள்.

வந்தியத் தேவனுக்கு ஒன்றும் விளங்கவில்லைதான்! ஆனாலும் இப்படிப்பட்ட அரிய சந்தர்ப்பத்தை— தன்னைத் தேடி வரும் சந்தர்ப்பத்தை அவன் விட்டு விடுவானா?

வருகிறது வரட்டும்; பிறகு நடப்பது நடக்கட்டும். இப்போது இந்த ஏணியில் ஏறலாம்; சுவரின் உச்சியை அடைந்த பிறகு மற்ற விவரங்கள் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.

ஏணியில் முக்கால் பங்கு அவன் ஏறியபோது அந்தப் பெண் மறுபடியும், "நல்ல தாமதக்காரன் நீ! அங்கே இளைய ராணியம்மாள் காத்துக் கொண்டிருக்கிறார்கள்! இங்கே நீ மதிள் சுவரில் சாய்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறாய்!" என்றாள். அப்போது ஏற்பட்ட அதிர்ச்சியினால் வந்தியத் தேவன் ஏணியிலிருந்து நழுவி விழுந்துவிட இருந்தான். நல்ல வேளையாக, அங்கே சுவரில் நீட்டிக் கொண்டிருந்த கல்லைப் பிடித்துக் கொண்டு சமாளித்தான்.

இளையராணி என்றால், பழுவூர் இளையராணியாகத்தான் இருக்கும்! தான் இங்கே வந்து உட்கார்ந்திருப்பது அவளுக்கு எப்படித் தெரிந்தது? மாய மந்திரம் ஏதோ அவள் அறிந்திருக்க வேண்டும்! தன்னைப் பார்ப்பதில் அவளுக்கு இவ்வளவு சிரத்தை ஏற்படக் காரணம் என்ன? ஒரு வேளை,— ஒரு வேளை,—வேறு எவனுக்காகவோ

வைத்த ஏணியில் நான் ஏறி விட்டேனோ? எப்படியிருந்தாலும் இருக்கட்டும்! முன் வைத்த காலைப் பின் வைக்க முடியாது! எல்லாம் சற்று நேரத்தில் தெரிந்து போய்விடுகிறது.

சுவரின் உச்சியருகில் வந்ததும் அவனுடைய கையைப் பிடித்து அந்தப் பெண் தூக்கிவிட்டாள். அப்போது நிலா வெளிச்சம் அவள் முகத்தில் அடித்தது. இதற்குள் ஆச்சரியப்படும் சக்தியையே வந்தியத்தேவன் இழந்து விட்டான். அதனால்தான் அவளுடைய முகம், வேளக்காரப் படையினர் துரத்திய தயிர்க்கூடைக்காரியின் முகம் போலத் தோன்றியும், அவன் சுவரிலிருந்து தவறி விழவில்லை. இன்றிரவு இதற்குமேல் என்னென்ன வியப்பான நிகழ்ச்சிகள் நடந்தாலும் வியப்படைவதற்கு இடமில்லைதான்.

“ஊம்! ஏன் விழித்துக் கொண்டு சுவர்மேலேயே உட்கார்ந்திருக்கிறாய்? ஏணியை எடுத்து உள்ளே இறக்கி விட்டுக் குதி சீக்கிரம்!” என்று சொல்லிக்கொண்டே அந்தப் பெண் சரசரவென்று மரக் கிளையிலிருந்து கீழே இறங்கினாள்.

வந்தியத்தேவன் அவள் கூறிய வாறே செய்தான். அவன் இறங்கிய இடம் ஒரு விஸ்தாரமான தோட்டம் என்று தெரிந்தது. சற்றுத் தூரத்தில் ஒரு பெரிய அரண்மனையின் மாடகூட கோபுரங்களும் சிகரங்களும் மங்கிய நிலா வெளிச்சத்தில் சொப்பன உலகக் காட்சியைப்போல் தோன்றின.

அது யாருடைய அரண்மனை என்று கேட்பதற்காக வந்தியத்தேவன் தொண்டையைக் கனைத்துக் கொண்டான். உடனே அந்தப் பெண் “உஷ்!” என்று சொல்லி உதட்டில் விரலை வைத்து எச்சரித்து விட்டு முன்னால் நடந்தாள். வந்தியத்தேவன் அவளைத் தொடர்ந்து சென்றான். (தொடரும்)

# “கல்கி” குடியரசு மலர்

குடியரசு மலர் அட்டைப் படம் முதல் கடைசி பக்கம் வரை பார்க்கப் பார்க்கத் தெவிட்டாமல் இருந்தது. இதுபோன்ற சிறப்பான மலர்களை வெளியிடுவது கல்கி காரியாலயத்தின் இயற்கை; வழக்கம். இருந்தாலும் அதன் உயர்வை உண்மையாகப் பாராட்டுவதும் ரசிகர்கள் வழக்கமல்லவா?

கோபிச்செட்டிப்
பாளையம், 27—1—51 கே. ஆர். கே. மூர்த்தி

★

நமது இரண்டாவது குடியரசு தினம் வந்தது. ‘கல்கி’ இரண்டாவது குடியரசு மலரும் வந்தது. ஆஹா! எவ்வளவு பக்கங்கள்? எவ்வளவு அறிவில் தேர்ந்தவர்களின் கதை - கட்டுரைகள். குடியரசு மலர் தானே. அதில் என்ன இருக்கப் போகிறது? போயும் போயும் காங்கிரஸ் தலைவர்கள் படங்களும் அவர்களைப் பற்றிய கதைகளும் எண்ணற்ற விளம்பரங்களும் ஒரு சில கட்டுரைகளுமே இருக்கும் என்று எண்ணியிருந்த என் போன்றவர்களுக்கு இம் மலர் ஒரு திகைப்பு. என்ன? மலர் ஒரு ரூபாயா? கையில் எடுத்து ஆராயும்போது ஒரு ரூபாய் தானா? இல்லை. இரண்டு ரூபாயும் அதற்கு மேலும் கொடுக்கலாம் என்று எண்ணத் தோன்றுகிறது. ‘கல்கி’ இரண்டாவது குடியரசு மலர் யாரும் எதிர்பாராத மாணிக்க மலராக, பொன் குவியலாக விளங்குகிறது. இருநூறுக்கு மேற்பட்ட பக்கங்களில் அதிக கதைகளுடன், நம் அருமைத் தலைவர்களின் அழகிய படங்களுடன் பாரத சாம்ராஜ்யச் சரித்திரமும், ஸ்ரீ தியாகராஜ சரிதையும், கார்ட்டூன் படங்களும் வாசகர்களின் மனதை ஒரே ரூபாயில் சந்தோஷப்படச் செய்துவிடுகிறது. இதுபோன்ற ஒரு சஞ்சிகையும் இந்த ஆண்டில் வரவில்லை. இது உறுதி! வெறும் புகழ்ச்சியல்ல. என்போன்ற ரசிகர்களின் உள்ளத்தில் எழும் எதிரொலி. இவ்வாண்டு மலரைப்போல் காலுக்குக்காலம் ‘கல்கி’ வளர்ச்சியடைய எல்லாம் வல்ல இறைவனை வழிபடுகிறேன்.

பரனூர்
27—1—51 வி. வி. என். எஸ். சேகர்.

★

‘கல்கி’ குடியரசு மலரைக் கண்டேன். சிறந்த இலக்கியமும், அரிய பெரிய கதைகளும், ஓவியங்களும் மிக உயர்ந்த முறையில் கொண்டுள்ளது. சுருங்கிய வார்த்தையில் சொல்லப்போனால் ‘கல்கி’ குடியரசு மலர் பிரமாதம்! பேஷ்! ஒன்னாம் நெம்பர்! என்றுதான் சொல்ல வேண்டும்.

ஆரணி
26—1—51 டி. வி. ரங்கசாமி

# ஆரோக்கிய ரகசியம்

## வி. என். குமாரஸ்வாமி

### 24. தூக்கம் சரியாக வருகிறதா?

ஒவ்வொருவரின் ஆரோக்கியம், சுறுசுறுப்பு, வேலைத் திறன் எல்லாம் அவரவர்களின் பித்தப் பையை அனுசரித்தே இருக்கிறது.

சிலருக்குப் பித்தப் பை சரியாய் வேலை செய்யாது. மந்தமாய் ஆமை வேகத்தில் வேலை செய்யும். அவர்கள் புத்தி, யோசனை, மற்ற காரியங்களும் அதே வேகத்தில்தான் நடக்கும். பெருந் தூக்கத்திற்கும் அதுதான் காரணம். சதா கொட்டாவி விடுவார்கள். சமயம் கிடைத்த போதெல்லாம் தூங்கி விடுவார்கள். எப்பொழுதும் சோம்பலாகவே இருந்து கொண்டிருப்பார்கள்.

இப்படிப் பெரியவர்கள் மட்டும் அல்ல; சிறியவர்களிலும் அநேகர் இருக்கின்றனர். கைக்குழந்தை முதல் வயதானவர்கள் வரை, பலர் இம்மாதிரி இருப்பார்கள். பையன் பள்ளிக்கூடத்தில் சரியாய்ப் படிக்கவில்லை, சோம்பேறியாய் இருக்கிறான் என்று பிரைவேட் படிப்பு வைத்தாலும் பாஸாக மாட்டான். அவன் பித்தப் பை மந்தமாய் இருப்பதே அதன் காரணம். சுறுசுறுப்பாய் இருக்க மாட்டான். மற்ற பையன்களுடன் விளையாட மாட்டான். அப்படிப்பட்ட பையன்களும் மயூராசனம் செய்வார்களானால் பரீட்சையில் தேறுவார்கள். நன்றாய்ச் சாப்பிடுவார்கள். நன்றாய் வளருவார்கள். சுறுசுறுப்பாகவும் இருப்பார்கள்.

கைக்குழந்தை, சிறுவர்கள் அதாவது இரண்டு முதல் ஐந்து வயதுவரையுள்ள குழந்தைகளுக்குப் பரிகாரம் என்னவென்று கேட்கலாம். சாதாரணமாய் ஆறு வயதான குழந்தைகள் செய்யலாம். அறுபதுக்கு மேலான பெரியவர்களும் செய்யலாம். ஆண், பெண் எல்லோரும் செய்யலாம். சிறு குழந்தைகளுக்கு என்ன செய்வது? பெற்றோர்தான் அவர்களுக்குக் காரணம். பெற்றோர்கள் மந்தப் பித்தப் பை உடையவர்களாய் இருந்தால் குழந்தையும் அம்மாதிரியிருக்கும். அல்லது ஆகார வகையினாலும் குழந்தை மந்தமாய் விடும். தேவையான ஆகாரத்தை நேரப்பிரகாரம் கொடுத்தால் குழந்தைக்கு நல்லது. ஒரு வயதுக் குழந்தைக்குத் தேங்காய் அளவு சாதத்தைப் பிசைந்து ஊட்டினால் குழந்தை எப்படிச் சுறுசுறுப்பாய் இருக்கும். பிடித்து வைத்த பிள்ளையார்போல் உட்கார்ந்த இடத்திலேயே இருக்கும்.

காரணம், அதன் வயிற்றுக்கு அதிக வேலை கொடுப்பதே ஆகும். சாப்பிட்ட ஆகாரத்திற்கு வேண்டிய பித்த நீரை அந்தச் சிறு பித்தப் பையினால் கொடுக்க முடிவதில்லை. அதனால் சாதம் ஜீரணமாவது கஷ்டமாய் விடுகிறது. பிறகு குடலுக்குப் போனால் அங்கும் ஜீரணமாவது கஷ்டம். தன் முழு சக்தியை உபயோகித்து ஜீரணம் செய்ய வேண்டியிருக்கிறது. அப்படி அதிகம் கஷ்டப்பட்டு ஜீரணம் செய்ய வேண்டுமானால் அதற்கு அதிக ரத்தம் தேவை. அப்பொழுது மற்ற பாகங்களுக்குப் போக வேண்டிய இரத்தம் குடல்களுக்கே போகவேண்டியிருக்கிறது. அப்படிப் போவதில் குடல் பெருத்தும், வயிறு பெருத்தும். கை, கால்கள் எல்லாம் குச்சியாய் விடுகிறது.

இதையே எல்லோருக்கும் எல்லா வயதினருக்கும் சொல்லலாம்.

குழந்தைகளை ஆசனம் செய்யச் சொன்னால் செய்யாது. சிறு குழந்தைகளானே. நாமே வயிற்றைத் தினமும் காலையில் காலியாய் இருக்கும்போது மெதுவாய்த் தடவிப் பிடித்து விட வேண்டும். முன்பு, பழைய காலத்துப் பாட்டிகள் காலையில் குழந்தையை மடியில் வைத்துக் கொண்டு, விளக்கெண்ணெயைக் கையில் தடவி, நெருப்பில் அனல் காட்டி வயிற்றை நன்றாய்த் தடவி, பிசைந்து விடுவார்கள்! பயிற்சி செய்ய முடியாத குழந்தைக்கு இது பயிற்சி அல்லவா? இப்பொழுது அதை மறந்து விட்டோம். ஏன் நாமும் அதைப் போலச் செய்யக் கூடாது? தனுராசனப் பயிற்சி குழந்தை கவிழ்ந்து விழுந்தால் ஏற்படுகிறது. குழந்தை நடக்க ஆரம்பித்தால் செய்யாது. அந்த மாதிரி பெரிய குழந்தைகளை முன் சொன்னபடி வயிற்றைப் பிடித்து விட்டு, வயிற்றுக்கு ஆகாரம் அதிகம் கொடுக்காமல், அளவாய் நல்ல பதார்த்தங்களாய் சீக்கிரம் ஜீரணமாகக் கூடியவைகளாய்க் கொடுத்து, சற்று கருணைக்கிழங்கையும் சேர்த்து வந்தால் சில நாளில் வயிறு சரியாய் விடும்.

சிலர் அமைதியின்றி, படபடப்புடன் தூக்கமின்றி இருப்பார்கள். இரவில் என்னதான் புரண்டு படுத்தாலும் தூக்கம் வராது. முதலில் சற்று கண் அயர்ந்தாற் போல் இருக்கும். பிறகு விழிப்பேற்பட்டால் தூங்கமுடியாது. தூக்கமும் வராது. அதற்குக் காரணம் பித்தப் பை அதிகமாக வேலை செய்வதே.



உபாத்தியாயர் :—வகுப்பில் ஒரு பையனையும் காணோம். நீ ஒருவன்தான் வந்திருக்கிறாய். நீதான் ரொம்ப நல்ல பையன்!

பையன் :—இன்றைக்குப் பள்ளிக்கூடம் விடுமுறை, ஸார்! ஞாபகப் பிசகாக நீங்கள் நிச்சயம் வருவீர்கள் என்று தெரிந்து, உங்களுக்கு இதைச் சொல்ல ஒருவரும் இருக்க மாட்டார்களே என்று வந்தேன், ஸார்!

ஒவ்வொருவருக்கும் முப்பது வயதுவரை எட்டு மணி நேரத் தூக்கம் அவசியம். அந்த வயதுக்குப் பின் ஆறுமணி நேரத் தூக்கம் சாதாரணமாய்ப் போதும். பெண்மணிகளுக்கு, முக்கியமாய்க் குழந்தைகளைப் பெறும் வயதுவரை எட்டு மணி நேரத் தூக்கம் அவசியம். அதன் பின் ஆறு மணி நேரம் போதும்.

இந்தக் கணக்குப்படி யாருக்கும் தூக்கம் மிகுதியாயும் இருக்கக் கூடாது. குறைவாயும் இருக்கக் கூடாது. சிலர் மத்தியானம் தூங்குவார்கள். அது அவசியமில்லை. தேக சிரமப்பட்டு வேலை செய்பவர்கள் மத்தியான நேரத்தில் ஒரு மணி நேரம் படுத்து இளைப்பாறலாம். தூக்கம் வர வேண்டுமென்ற அவசியம் இல்லை. சிலர் தூங்கியும் விடுவார்கள். அதனால் பாதகமில்லை. ஒரு காரியமும் இல்லாதவர்கள் பகல் தூக்கம் தூங்கக் கூடாது. சகோதரிகள் ஏதோ இரவில் குழந்தைகளுடன் கண் விழிக்க நேர்ந்தால், பகலில் சற்று தூங்கலாம். சிலருக்கு இரவில் சரியாய்த் தூக்கம் வரவில்லையானால் தலைவலி வந்து விடும். அதற்கு ஒருவித மருந்தும் வேண்டியதில்லை. ஒரு மணி நேரம் தூங்கினால் கூடச் சரியாய்விடும்.

'அப்படியானால் இரவெல்லாம் தூக்கமில்லாமல் கஷ்டப்படுகிறவர்கள் பகலில் தூங்கலாம் போலிருக்கு' என்று கேட்கலாம். பகல் நேரம் மிக அருமையான நேரம். வாழ்நாட்களில் முன்னேறும் நேரம். அதைத் தூங்கி வீணாகக் கழிக்கலாமா? இரவுதான் தூங்குவதற்கு ஏற்ற நேரம். இயற்கையும் கூட.

சிலருக்குப் பல தொல்லைகளினால் தூக்கம் கலைந்தால் மறுபடி தூக்கம் வராது. குடும்பத் தொல்லைகள், வியாபாரத் தொல்லைகள், பணத் தொல்லைகள் இம்மாதிரி எத்தனையோ தொல்லைகள் வந்து தூங்க முடியாது. இவையெல்லாம் மனதைக் கொண்டு பரிகாரம் தேட வேண்டியவை.

மகாத்மா காந்தி அவர்களுக்கு இல்லாத கவலையா மற்றவர்களுக்கு? அவர் அரை மணி நேரம் தூங்கி எழுந்திருக்கிறேன் என்றால் உடனே தூங்கிச் சரியாய் அலாரம் வைத்தது போல் அரைமணி நேரம் கழிந்த பிறகு எழுந்திருப்பாராம். நெப்போலிய வீரனும் அவ்வாறே. காடு, மலை மரநிழல் எதுவாய் இருந்தாலும் படுத்தவுடன் நிஷ்டையில் ஆழ்வது போல் தூங்கி விடுவானாம். அவ்வளவு பெரியவர்களும் மனதை அவர்கள் வசம் வைத்திருந்தனர். ஆகவே மனதைக் கண்டபடி அலைய விடாமல் தூங்கப் பழகிக் கொள்ள வேண்டும்.

தவிர, தூங்குவதற்கு முன் ஆகாரப்பை காலியாய் இருப்பது நல்லது. அப்பொழுது பித்தப் பையும் தன் வேலையை முடித்துக் கொண்டு ஓய்வெடுத்துக் கொள்ளும். நன்றாய்ச் சாப்பிட்டு விட்டுத் தூங்கினால், பித்தப்பை ஆகாரத்தில் கலக்கும்போது பித்தம் அதிகப்படும். அதன் விளைவாய் அன்று பகலில் கண்ட, கேட்ட, படித்த, நினைத்த விஷயங்களெல்லாம் கனவில் வரும்.

உதாரணமாய் வாலிபர்கள் சினிமா பார்த்துவிட்டு வந்தார்கள் என்று வைத்துக் கொள்ளுவோம். அவர்களுக்கு எந்தக் கட்டம் மிகப் பிடித்ததோ, அது மனதில் தன்னை யறியாமலேயே படிந்திருக்கும். பிறகு கனவில் இவர்களே கதா நாயகர்களாய்த் திகழ ஆரம்பித்து விடுவார்கள். அதன் பலன் கனவோடு மட்டும் நின்று விடாது. இவர்களின் உடலே போய்விடும். நாவல் புத்தகம் படிப்பவர்களுக்கு அதில் நடக்கும் காதல், கொலை, தப்பறிதல் முதலியவைகளெல்லாம் கனவாய் வரும். தூக்கத்தில் உடலும், மனதும் சாந்தி அடைவதற்குப் பதில் மேலும் சோர்வையே உண்டாக்கும்.

வசிக்கும் வீடு, போகும் இடங்கள், பழகும் நண்பர்கள், காணும் காட்சிகள், கேட்கும் கீதங்கள், படிக்கும் புத்தகங்கள், எண்ணும் எண்ணங்கள் எல்லாம் மனிதனை உன்னத நிலைக்கு உயர்த்துவதாய் இருக்க வேண்டும். உடல், மனம், அறிவு, ஆன்மா அவையனைத்திற்கு அவை துணை செய்வதாய் இருக்க வேண்டும். இதற்கு வேண்டிய மனோதிடம், மனோபலம் அளிப்பது யோக ஆசனங்கள் ஒன்றுதான். (தொடரும்)

# காணமற்போன கனகா

என். ராஜம்

மாஸ்டர் வேணுவுக்கு அன்று என்றுமில்லாதபடி கோபம் வந்தது. "என் ஐயா, வீட்டில் வளர்த்த பெரிய பெண்ணைக் காணவில்லை என்று எங்களைத் தேடிக்கொண்டு வந்திருக்கிறீர்? உமக்கு வெட்கமாக இல்லையா?" என்றார்.

வந்த பெரிய மனிதர் திருப்பிக் கோபித்துக் கொள்ளாமல் பணிவாகவே பதில் அளித்தார். "வெட்கமாகத்தான் இருக்கிறது. ஆனால் என்ன பண்ணுவது? வெளியே தெரிந்தால் வெட்கக்கேடு. ஊரெல்லாம் சிரிக்கும். அதெல்லாம் போக இன்னும் பத்து நாளில் கல்யாணம் என்று கூடக் குறிப்பிட்டு ஆகிவிட்டது. அதற்குள் மூன்றாவது ஆசாமிகூட அறியாமல் பெண்ணை எப்படியாவது வீட்டில் கொண்டுவந்து சேர்த்துவிட வேண்டும். கனகா இந்த சமயத்திற் காணாமல் போய்விட்ட செய்தி பிள்ளை வீட்டுக்காரர்களுக்குத் தெரிந்து விட்டால் அப்புறம் கேட்க வேண்டியதே யில்லை. கல்யாணம் முறிந்து விடுவது மட்டுமல்ல—ஆயுள் பூராவுக்கும் கனகாவுக்குக் கலியாணமாக வழியே யில்லாமற் போய்விடும்."

பேசிக் கொண்டிருந்தவருடைய அடர்ந்த புருவத்தையும் உயர்ந்த நெற்றியையும், கூர்மையான மூக்கையும் பார்த்துக் கொண்டே எதுவும் சொல்லாமல் உட்கார்ந்திருந்தார் மாஸ்டர் வேணு. தன்னுடைய மாஸ்டரின் முகபாவங்களுக்கெல்லாம் பழக்கப்பட்ட மிஸ்டர் கோவிந்தனுக்கு அவருடைய அப்போதைய முகபாவம் பிடிபடவில்லை. தன்னுடன் பேசிக் கொண்டிருப்பவருடைய முழு மனசையும் திறந்த கண்ணாடிக்குள் பார்ப்பது போலப் பார்த்து அறிந்து கொள்ளும் அதிமானுஷ்யமான நுட்ப அறிவு பெற்ற மாஸ்டர் வேணு, இப்போது பேசிக் கொண்டிருப்பவருடைய மனசை, உள்ளத்திலிருக்கும் எண்ணத்தை அறிய முடியாமல் தவிப்பது போலத் தோன்றியது.

அவர்களைத் தேடி வந்தவர் உண்மையில் பெரிய மனிதர்தான். அவர் பெயர் விசுவநாதம் பிள்ளை என்று அவர் தந்த 'விஸிடிங் கார்டு' சொல்லிற்று. அவருடைய நடை உடை பாவனைகளும், பெரிய காரும், சுத்தமான ஆடை அணிந்திருந்த டிரைவரும், வேலைக்காரனும், அவர் பெரிய மனிதர்தான் என்று கட்டியம் கூறின.

அவர் மிகவும் சுருக்கமாகவே அவர்களைத் தேடிக் கொண்டு தான் வர நேரிட்டதைப் பற்றிச் சொன்னார்.

விசுவநாதம் பிள்ளை பேச ஆரம்பித்தது முதல், மாஸ்டர் வேணு முகத்தில் ஒரு வித வியப்புக் குறியுடன் அவரையே பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்தார். பத்து நிமிஷத்துக்கெல்லாம் வேணு சட்டென்று எழுந்தார். விசுவநாதம் பிள்ளை சொல்லிக் கொண்டிருந்த வாக்கியத்தைப் பாதியிலேயே நிறுத்திக் கொள்ள வேண்டியதாயிற்று.

விசுவநாதம் பிள்ளைக்கு "என் அஸிஸ்டெண்டு" என்று கோவிந்தனை அறிமுகம் செய்து வைத்தார் மாஸ்டர் வேணு பிறகு, "நான் அவசர காரியம் ஒன்றைக் கவனிக்க வெளியே செல்கிறேன். இருபது நிமிஷம் அல்லது அதிகமாகப் போனால் அரை மணியில் திரும்பி விடுவேன். உங்கள் கேஸ் விஷயமாகச் சகல தகவல்களையும் கோவிந்தனிடம் சொல்லும்!" என்று சொல்லிவிட்டு மாஸ்டர் வேணு அவருடைய அனுமதிக்காகக் காத்திராமல் கைப் பிரம்பை எடுத்துக்கொண்டு கிளம்பி விட்டார்.

இந்த மாதிரி இதற்கு முன் நடந்ததேயில்லை என்று கோவிந்தனுக்குத் தெரியும். எந்தப் பேர்வழியுடனும் மாஸ்டர் வேணு தானேதான் பேசுவார். "நான் துப்பறிபவன் என்று சொல்லிக் கொள்வது பிசகு. துப்புத் துலக்க நான் என் அறையை விட்டு வெளியே போக வேண்டிய அவசியமே கிடையாது. என்னுடன் யார் பேசினாலும் அவனுடைய மனசை, மனசின் மூலை முடுக்குகளில் ஒளிந்து கொண்டிருப்பதை எல்லாம் நான் அறிந்து கொண்டு விடுவேன். இந்தச் சக்திகள்தான் நான் இதுவரை அடைந்திருக்கிற வெற்றிகளுக்கெல்லாம் காரணம்" என்று சொல்லும் மாஸ்டர் வேணுவா இப்படி ஒரு அரிய சந்தர்ப்பத்தை நழுவ விட்டுவிட்டு, விசுவநாதம் பிள்ளையைத் தன்னுடன் பேச விட்டுவிட்டுப் போனார் என்று கோவிந்தனுக்கு ஆச்சரியமாக இருந்தது. அப்படி எதுவும் அவசர காரியம் வெளியே அவருக்கு இருந்ததாகக் கோவிந்தனுக்குத் தெரியவில்லை.

ஆனால் கோவிந்தன் அகப்பட்ட சந்தர்ப்பத்தை நழுவவிடக் கூடியவன் அல்ல. அதுவும் வந்த மனிதர் பெரிய மனிதர், பணக்கார மனிதர் மாதிரியிருந்தார்.

கோவிந்தன் சொன்னான்: எந்தக் கேஸிலும் நாங்கள் ஈடுபட்டு எங்கள் வேலையைத் தொடங்கு முன் எங்களுக்கு ஆயிரம் ரூபாய் அட்வான்ஸ் பீஸ் தர வேண்டும். கேஸ் ஜயித்தபின் கொடுப்பது அவரவர்கள் இஷ்டம்" என்றான். எப்போதுமே கோவிந்தனுக்கு இந்த ஆயிரம் ரூபாயில்தான் குறி.

"ஆயிரம் ரூபாயல்ல — ஐயாயிரம் வேண்டுமானாலும் தருகிறேன். இதோ... எனக்குப் பெண்தான் முக்கியம்" என்றார் விசுவநாதம் பிள்ளை.

"உங்கள் பெண் எங்களைத் தப்பி எங்கும் போய்விட முடியாது. நீங்கள் கவலைப் படவே வேண்டியதில்லை" என்றான் கோவிந்தன்.

"மாஸ்டர் வேணுவைப் பற்றிப் பிரமாதமாகச் சொல்லிக் கொள்ளுகிறார்கள். ஆனால் பார்த்தால் அப்படி ஒன்றும்......" என்று பாதி சொல்லித் தயங்கி நிறுத்தினார் விசுவநாதம் பிள்ளை.

"நானும் அவருடன் இருக்கிறேன் என்பதை மறந்து விடுகிறீர்களே. நாங்கள் — நான் இதுவரையில் ஒரு கேஸி



லும் தோல்வி யுற்றதில்லை" என்றான் கோவிந்தன், அடக்கமாக.

"அது சரி, நானும் கேள்விப் பட்டேன். ஆனால் மாஸ்டர் வேணுவைப் பார்த்தபின் அவர் என்னவோ...... ப்......செமி...செமி என்பார்களே ...... அந்தமாதிரி ...... அது தான் சந்தேகமாக இருக்கிறது!" என்றார் விசுவநாதம் பிள்ளை.

"சந்தேகமே வேண்டாம்" என்று அவருக்கு உறுதி கூறினான் கோவிந்தன்.

## 2

"விவரமாக ஆதியோடந்தம் எல்லாவற்றையும் சொல்லுங்கள்" என்றான் கோவிந்தன்.

விசுவநாதம் பிள்ளை சொன்னார்:

அன்று வெள்ளிக்கிழமை.

அதற்கு முந்திய நாளுக்கு முந்திய நாள் — அதாவது புதன்கிழமை இரவு முதலே கனகாவைக் காணவில்லை. அன்றிரவு சாப்பிட்டு விட்டுப் படித்துக் கொண்டிருந்தாள். பத்தரை மணிக்கு வழக்கம் போலப் பால் சாப்பிட்டு விட்டு அவள் அம்மாவுடன் சிறிது நேரம் பேசிக் கொண்டிருந்தாள் பிறகு தன் அறைக்குள் போய்ப் படுத்தாள்.

அதுதான் கடைசியாக அவளை யாரும் பார்த்தது.

மறுநாள் காலையில் முதலில் யாரும் அதிகக் கவலைப்படவில்லை. கனகம் சில நாட்கள் அதிகாலையில் எழுந்து விட்டால் பங்களாவை அடுத்திருந்த கோயில் நந்தவனத்தில் போய் உலாவி விட்டு வருவதுண்டு. அவள் அறையில் அவளில்லை என்று கண்டவுடன் எல்லோருமே அப்படித்தான் நினைத்தார்கள். மணி எட்டு ஆயிற்று, ஒன்பது ஆயிற்று; ஒரு தகவலும் கிடைக்கவில்லை மணி பத்தானதும்தான் விசுவநாதம் பிள்ளைக்கும் அவர் மனைவிக்கும் உண்மையிலேயே கவலை தோன்றி விட்டது. தாய் மாமன் வீட்டுக்குப் போயிருப்பதாக, வேலைக்காரர்கள் உள்பட எல்லோரிடமும் சொல்லிவிட்டு, அவரும் அவர் மனைவியும் வியாழன் பூராவும் கவலையை மனசிலேயே வளர விட்டுக் கொண்டு புழுங்கினார்கள். வெள்ளிக்கிழமை காலையிலும், பத்து மணித் தபாலிலும் ஒரு தகவலும் வராமல் போகவேதான், விசுவநாதம் பிள்ளையும் அவர் மனைவியும் உலகம் புகழும் துப்பறியும் நிபுணர் மிஸ்டர் வேணுவின் உதவியை ரகசியத்தில் நாடுவது என்று தீர்மானித்தனர்.

விஷயம் வெளியே வரக்கூடாது என்பது மட்டுமல்ல; வருகிற புதன் அன்று கல்யாணமும் தடையுறாமல் நடைபெற்று

விடவேண்டும். இதை வேணு செய்து விட்டாரானால் என்றென்றும் அவருக்குக் கடமைப் பட்டிருப்பதாகக் கூறி முடித்தார் விசுவநாதம் பிள்ளை.

"ஏற்பாடாகியிருக்கிற இந்தக் கலியாணத்தில் தனக்குச் சம்மதமில்லை என்று உங்கள் பெண் உங்களிடம் எப்பொழுதாவது சொல்லியதுண்டோ?" என்று கேட்டான் கோவிந்தன்.

விசுவநாதம் பிள்ளை ஒரு விநாடி தயங்கினார். பிறகு "எனக்குத்தான் இதில் கொஞ்சம் ஆக்ஷேபம். கனகாவுக்கும் அவள் தாயாருக்கும் இந்தக் கலியாணத்தில் பூரண திருப்தி!" என்றார்.

"உங்கள் குடும்பத்துக்கு விரோதிகள்..."

"எங்கள் குடும்பம் தலைமுறை தலைமுறையாகச் சொத்தும் சுதந்தரமும் செல்வாக்கும் பெற்று வந்துள்ள குடும்பம். விரோதிகள் என்று சொல்லிக் கொள்பவர்கள் இருப்பார்கள். ஆனால் அவர்களைப் பாராட்டவேண்டிய அவசியமே இதுவரை ஏற்பட்டதில்லை" என்றார் விசுவநாதம் பிள்ளை.

"உங்கள் பெண்ணுக்கு—இப்படிக் கேட்பது பற்றிக் கோபித்துக் கொள்ளக் கூடாது. ஆனால், அவசியமான கேள்வி இது - உங்கள் பெண்ணுக்குக் கள்ளக் காதலன், நண்பன், யாராவது இருந்து கலியாணத்துக்கு முன் இருவரும்..."

"அப்படி ஒன்றும் இல்லை என்று எனக்கு நிச்சயமாகத் தெரியும்!" என்றார் விசுவநாதப் பிள்ளை. "என் பெண் அப்படி எல்லாம் செய்கிற பெண் அல்ல. நான் தான் பெண்ணைக் கிளி மாதிரி வளர்த்துப் பாழும் பூனை கையில் கொடுக்கத் துணிந்து விட்டேனே தவிர..."

கோவிந்தன் குறுக்கிட்டான்: "உங்களுக்கு இஷ்டமில்லாவிட்டால் ஏன் இந்தக் கலியாணத்தை......"

"நீர் கலியாணமானவர் தானே, ஐயா! உமக்குத் தெரியாதா? எத்தனையோ காரியங்களில் நமக்கு இஷ்டமில்லாவிட்டாலும் கூட விட்டுக் கொடுத்துத்தானே தீரவேண்டியிருக்கிறது?" என்று கேட்டார் விசுவநாதம் பிள்ளை.

"ஆமாம், ஆமாம்" என்றான் கோவிந்தன். சட்டென்று 'ஹோம் டிபார்ட்மெண்டி'ன் ஞாபகத்தில் அவன் முகம் கடுத்தது.

3

"ஐயா பிள்ளைவாள்!" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே வந்தார் இந்தச் சமயத்தில் மாஸ்டர் வேணு.

"சொன்னாற்போல, சரியாக இருபது நிமிஷத்தில் வந்து விட்டீர்களே!" என்று சொன்னார் விசுவநாதம் பிள்ளை.

"ஒரு ஐந்து நிமிஷம் பக்கத்து அறையில் படுத்து உறங்கி விட்டேன். நான் முன்னமேயே வந்து விட்டேன்" என்றார் மாஸ்டர் வேணு.

மாஸ்டர் வேணு தன்னைக் கேலி செய்கிறாரோ என்று எண்ணிய விசுவநாதம் பிள்ளை அவரை நிமிர்ந்து பார்த்தார்.

"நீர்தான் என்னைக் கேலி செய்ய உத்தேசித்தீர். நடக்காது ஐயா, நடக்காது!" என்றார் மாஸ்டர் வேணு. "உம்முடைய பெண் கனகாவின் இருப்பிடத்தைத் தேடிக் கண்டுபிடித்து விட்டேன். புதன் கிழமைதானே கல்யாணம்? வந்து சேருவாள். நீர் போகலாம்" என்றார்.

விசுவநாதம் பிள்ளை பதிலும் சொல்ல முடியாமல் தயங்கினார்.

"ஏன் தயங்குகிறீர்? கல்யாண தினத்தன்று பெண் வரவேண்டுமா, வரவேண்டாமா? மனசைத் திடப்படுத்திக்கொண்டு சொல்லும்" என்றார் வேணு.

"வந்து......வந்து......"

"பெண் கல்யாண தினத்தன்று வந்து சேர்ந்துவிட்டால் ஐயாயிரம் ரூபாய்





கணவன் :—அடிக்கடி என்னை 'நெக்லேஸ்' எப்பொழுது வாங்கித் தருகிறீர்கள் என்று கேட்டுக் கொண்டே இருக்காதே. இதோ இந்தச் 'செக்கை'க் கழுத்தில் கட்டிக்கொண்டு இரு. பாங்கியில் பணம் சேர்ந்ததும் வாங்கிக்கோ!

கொடுப்பீரல்லவா?'' என்று கேட்டார் மாஸ்டர் வேணு.

''ஐயாயிரத்தையும் வாங்கிக் கொண்டு விட்டேனே!'' என்றான் கோவிந்தன்.

''அதைத் திருப்பிக் கொடுத்துவிடு, கோவிந்தா!''

''திருப்பிக் கொடுத்து விடுவதா?'' கோவிந்தனுக்குத் தன் காதுகளையே நம்ப முடியவில்லை

''கொடுத்துவிடு. பெண் கலியாண தினத்தன்று வந்து சேராமல் இருப்பதற்காக நமக்குப் பத்தாயிரம் கொடுப்பார் விசுவநாதம் பிள்ளை'' என்றார் மாஸ்டர் வேணு.

விசுவநாதம் பிள்ளை ஒரு துள்ளுத் துள்ளிக் குதித்து எழுந்தார்: ''எப்படித்தான் என் மனசிலிருப்பதெல்லாம் உங்களுக்குத் தெரிந்து போய் விடுகிறதோ!'' என்றார்.

மாஸ்டர் வேணு கேட்டார்: ''அது மட்டுமா? பெண் இருக்கிற இடத்தையும் கண்டு பிடித்தாகி விட்டது. இப்போது அவளைக் கலியாண தினத்தன்று கொண்டு வந்து சேர்க்க வேண்டுமா வேண்டாமா என்பதுதான் கேள்வி.''

''வேண்டாம், வேண்டாம்!'' என்றார் விசுவநாதம் பிள்ளை.

கோவிந்தன் பிரமித்துப் போனான். 'பெண்ணைக் காணவில்லை. கண்டுபிடித்துக் கலியாண தினத்தன்று கொண்டுவந்து சேர்த்துவிடு. ஆயிரமல்ல; ஐயாயிரம் தருகிறேன்' என்று வந்த விசுவநாதம் பிள்ளை இப்போது 'வேண்டாம்! வேண்டாம்!' என்கிறாரே என்று வியந்தான் கோவிந்தன்.

இதற்குள் விசுவநாதம் பிள்ளை சொன்னார்: ''தங்களைப் பற்றி எல்லோரும் பிரமாதமாகச் சொல்லிக் கொள்ளக் கேட்டிருக்கிறேன். ஊரில் சொல்லிக் கொள்வது மிகையே யல்ல என்பது தங்களை நேரில் சந்தித்த பிறகுதான் தெரிகிறது. உண்மையை இப்போது சொல்லி விடுகிறேன். எனக்கோ என் பெண்ணுக்கோ இந்தக் கலியாணத்தில் சிறிதும் சம்மதம் இல்லை. ஆனால் என் மனைவியோ பிடிவாதம் பிடிக்கிறாள்...''

''புரிகிறது!'' என்றார் மாஸ்டர் வேணு.

''என் பெண்ணினுடைய சம்மதத்தின் பேரில் தான் நான் இதற்கு ஏற்பாடு செய்தேன்'' என்றார் விசுவநாதம் பிள்ளை.

''ஒன்றில் மட்டும்தான் ஏமாந்து விட்டீர்கள் என்று சொல்லவேண்டும்'' என்றார் மாஸ்டர் வேணு.

''எதில்?'' என்று கேட்டார் பிள்ளை.

''பெண்ணின் பெயர் இதனால் கெட்டு விடுமே என்று நீர் யோசிக்கவில்லை. திருந்த முடியாமல் கெட்டு விடுமே என்று எண்ணிப் பார்க்காமல் இருந்து விட்டீர்கள்!''

''கனகாவை......யாருக்கும் தெரியாமல் ஒளிந்து கொள்ளச் சொல்லும் வரையில் நான் இதைப் பற்றி யோசிக்கவில்லை. மறைந்து விடுவது கல்யாணத்தைத் தடுக்கச் சிறந்த வழியாகத் தோன்றியது. காணமற் போனவளைப் பெயர் கெடாமல் திருப்பிக் கொண்டு வருவது எப்படி என்று யோசிக்கும்போதுதான் தெரிந்தது. இதிலுள்ள சிரமம்! அதற்குள் விஷயம் தெரியாத என் மனைவி உண்மையிலேயே ரொம்பவும் பதட்டமடைந்து விட்டாள். அவள் உங்களைப் பற்றிச் சொல்லவே நான்...'' என்றார் விசுவநாதம் பிள்ளை.

''என்னை உபயோகித்துக் கொள்ளலாம் என்று எண்ணி இங்கு வந்தீர்கள். ஆனால் நீங்கள் எண்ணிய மாதிரி நான் தங்களுக்கு உபயோகப்படுவதாக உத்தேசமில்லை'' என்றார் மாஸ்டர் வேணு.

இவ்வளவும் ஆனபிறகு ''தாங்கள்தான் எனக்கு வழி காட்டவேண்டும்'' என்று கெஞ்சினார் விசுவநாதம் பிள்ளை.

''பெண் காணமற் போனதுதான் ரகசியமாகவே இருந்து விட்டதே! பின் என்ன? தாய் மாமன் வீட்டுக்குப் போய் வந்தவள் மாதிரி சொல்லி விடுவது......''

''ஆனால் கலியாணம்?'' என்று இழுத்தார் விசுவநாதம் பிள்ளை.

மாஸ்டர் வேணு சற்று நேரம் பேசவில்லை. பிறகு, "இந்தக் கல்யாணம் நடப்பதில் உமக்கு ஏன் இஷ்டமில்லை?" என்று கேட்டார்.

"சம்பந்தம் செய்து கொள்கிற இடம் நமக்குச் சரிசமானமாகவாவது இருக்க வேண்டும். பெண் கொடுக்கிற இடம் சற்று உயர்ந்ததாக இருந்தால் தேவலை என்பார்கள். அதுவும் தவிரப் பையன் சரியான பையன் இல்லை. அரை குறைப் பணக்காரனுக்கு உள்ள எல்லாக் குறைகளும் அவனுக்கு இருக்கின்றன" என்றார் விசுவநாதம் பிள்ளை.

"இது உங்கள் ஆக்ஷேபம். பெண்ணின் ஆக்ஷேபம் என்ன?"

"பிடிக்கவில்லை என்று சொன்னாள்; எனக்கும் பிடிக்கவில்லையாதலால் அதற்கு மேல் நானும் கேட்கவில்லை."

"இப்பொழுது கேட்டுவிட்டால் போகிறது" என்றார் மாஸ்டர் வேணு. பிறகு கோவிந்தனைப் பார்த்து, "கோவிந்தா! பிள்ளைவாள் காரில் வேலைக்காரன் உட்கார்ந்திருப்பான்! அவனைக் கையோடு கூட்டிவா!" என்றார்

கோவிந்தன் தூங்கி விழித்தவன் மாதிரி "என்ன?" என்றான்.

மீண்டும் மாஸ்டர் வேணு வேலைக்காரனை அழைத்து வரச் சொன்ன பிறகு கோவிந்தன் போனான்.

விசுவநாதம் பிள்ளை ஏதோ அதிசயத்தைக் கண்டவர் மாதிரி திறந்த வாய் மூடாமல் உட்கார்ந்திருந்தார். "இது எப்படி உமக்குத் தெரிந்தது?" என்றார்.

"நாம் எத்தனையோ விஷயங்களை மறைத்து வைக்கிறோம். ஆனால் ஒன்றையும் பூரணமாக மறைத்து வைத்து விட முடிவதில்லை" என்றார் மாஸ்டர் வேணு.

"பயல் 'வரமாட்டேன்' என்றான். நானா விட்டு விடுவேன்? கழுத்தில் கை போட்டுத் தள்ளிக் கொண்டு வந்து சேர்த்து விட்டேன்" என்று சொல்லியவாறே கோவிந்தன், தனக்கு முன்னால் அந்த வேலைக்காரப் பையனைத் தள்ளிக் கொண்டுவந்து நின்றான்.

"அம்மா, கனகா! இவர் எல்லாவற்றையும் எப்படியோ உடைத்து விட்டார். இனிமேல் வேஷத்தைக் கலைத்துவிட வேண்டியதுதான்!" என்றார் பிள்ளை.

"வேஷம் ரொம்பவும் பொருத்தித்தான் இருக்கிறது?" என்றான் மாஸ்டர் வேணு.

"யாரு? யாரு?..." என்றான் கோவிந்தன். அவனுக்கு ஒன்றும் புரியவில்லை.

"அந்தப் பிள்ளையைக் கலியாணம் செய்துகொள்ள எந்தப் பெண்ணும் நியாயமான ஆக்ஷேபங்கள் ஒரு நூறாவது சொல்லலாம். அதனால் பாதகமில்லை. கலியாணம் தானாகவே நின்றுவிடும். நீங்கள் இனி வீடு போகலாம்."

"எப்படி?"

"அப்பாடா!" என்றாள் கனகா.

"பிள்ளை வீட்டாரில் பரமதரித்திரனான ஒருவனைப்பார்த்துப் பெண் வீட்டாருக்கு ஏற்ற சம்பந்தமில்லை இது என்று பெண் வீட்டார் பேசிக் கொள்வதாகச் சொல்லி விட்டு வந்தேன். அதற்காகத் தான் நான் சற்று முன் வெளியே போய்விட்டு வந்தேன்."

"நான் வந்தவுடனேயே விஷயம் புரிந்து விட்டதா உங்களுக்கு?"

"உடனே புரியவில்லை. உங்கள் மனசு என் மனசுடன் முதலில் நன்றி பேச மறுத்தது. அதுதான் கோபம் வந்தது எனக்கு. கீழே உம் காரிடம் போய் டிரைவர், வேலைக்காரன் இருவரிடமும் பேச்சுக் கொடுத்தேன். வேலைக்காரனுடன் பேசத் தொடங்கியவுடனே விஷயம் விளங்கி விட்டது. புரிந்து கொண்டதும் நம்மால் ஆன உதவி செய்வோம் என்று உங்கள் சம்பந்தியாரைத் தேடிப் போனேன். அவ்வளவுதான்" என்றார் மாஸ்டர் வேணு. ஏதோ சுலபமாகச் செய்து முடித்துவிட்ட ஒரு காரியத்தைப் பற்றிப் பேசுகிற மாதிரியில்.

"அப்படியா?" விசுவநாதம் பிள்ளை மூக்கில் கை வைக்காத குறைதான்.

"உங்கள் பெண்ணுடன் நீங்கள் வீட்டுக்குப் போங்கள். நீங்கள் வீட்டுக்குப் போனதும் இந்தச் சம்பந்தம் நமக்கு வேண்டாம் என்று உங்கள் மனைவி தானாகவே சொல்லி விட்டால் கூட ஆச்சரியப்பட வேண்டியதில்லை" என்றார் வேணு.

"நான் இனி எதைக் கண்டும் ஆச்சரியப்பட மாட்டேன்" என்றார் விசுவநாதம் பிள்ளை.

விடை பெற்றுப் போகும்போது மாஸ்டர் வேணுவைப் பார்த்து முத்துப் பல் வரிசை தெரியக் கனகம் ஒரு புன்முறுவல் பூத்தாள். "அப்பா! நடக்காத கலியாணத்தன்று - வருகிற புதன்கிழமையன்று — ஒரே விருந்தாளியாக ஐயாவை நம்ப வீட்டிலே சாப்பிடக் கூப்பிடப்பா!" என்றாள்.

கோவிந்தனுக்கு விஷயம் என்னவோ சரிவர விளங்கவேயில்லை. ஆனால் புதன் கிழமை என்ன? எந்தக் கிழமையிலும் அவன் விருந்து சாப்பிடத் தயார்தான். எனினும் மாஸ்டர் வேணு பதில் சொல்வதற்கு முன்பாகவே அவன் இருவருக்குமாகச் சேர்த்து "ஆகா, வருகிறோம்!" என்று பதில் சொல்லி விட்டான்.




## 8. ராஜகுமாரனும் சுந்தரியும்

சுந்தரியோடு கை கோத்துக் கொண்டு ராஜ வீதிவழியாக நடந்து வந்த ராஜகுமாரன் ராஜாமாதிரி கம்பீரமாக நடந்தான். பூமியில் தன் கால்கள் பாவுவதாகவே தோன்றவில்லை அவனுக்கு. மனசில் நிறைந்திருந்த மகிழ்ச்சி காரணமாக அவன் உடல் முழுவதும் சிலிர்த்தது. விநாடிக்கு ஒரு தடவை சுந்தரியின் அழகிய முகத்தைப் பார்த்துக் கொண்டே நடந்தான். இத்தனை நாட்களாக அவன் முகத்தில் குடிகொண்டிருந்த சோர்வும் களைப்பும் ஏக்கமும் இப்பொழுது இருந்த இடம் தெரியாமல் போய் விட்டன.

ராஜகுமாரன் தன்னைத் திரும்பித் திரும்பிப் பார்க்கும் போதெல்லாம் சுந்தரிக்குச் சிரிப்புதாங்க முடியவில்லை.

"இளவரசரே, என்னுடைய கை தான் உங்களிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கிறதே! அப்படியிருக்க என்னை அடிக்கடி திரும்பிப் பார்க்கிறீர்களே! ஏன்?" என்று வீணையைப் பழிக்கும் குரலில் கேட்டாள் சுந்தரி.

ராஜகுமாரன் இதைக் கேட்டுக் 'கல கல' வென்று நகைத்தான்.

"சுந்தரி, நீ என்னைக் கப்பல் விபத்தில் கைகொடுத்துக் காப்பாற்றியதிலிருந்து உன்னை நான் காண ஆவல் கொண்டு தவித்த தவிப்பு உனக்குத் தெரியாது. என் மனம் உன்னை நினைத்துப் பட்ட வேதனையை நீ அறிந்திருந்தால் என்னை இம்மாதிரி கேட்க மாட்டாய்! ஒவ்வொரு நிமிஷமும் நீ முன் மாதிரி எங்கே மறைந்து விடுவாயோ என்னும் பயம் என்னை உலுக்கி எடுக்கிறது. இப்போது நாம் கனவு உலகத்தில் நடக்கிறோமா இல்லை—நிஜமாகவே நடந்து போகிறோமா என்று என்னால் இன்னும் நிச்சயிக்க முடியவில்லை. அதனால்தான் உன்னுடைய பொன் முகத்தைப் பார்த்துப் பார்த்து நிலைமையை நிச்சயப்படுத்திக் கொள்ள என்னால் ஆன மட்டும் முயற்சி செய்கிறேன்" என்று ராஜகுமாரன் சொன்னான்.

"இளவரசரே, ஆகா! நீங்கள் ரொம்ப நன்றாய்ப் பேசுகிறீர்கள். நாம் அரண்மனைக்குப் போவதற்குள் அந்த வேதனையைப் பற்றிச் சொல்லுங்களேன்!" என்றாள் சுந்தரி.

"சுந்தரி, கேள். என்னை விபத்திலிருந்து காப்பாற்றிக் கரை சேர்த்து விட்டு நீ மறைந்து விட்டாய். நான் சற்று நேரத்துக்கெல்லாம் மயக்கம் தெளிந்து எழுந்து சுற்று முற்றும்

பார்த்தேன். கண்ணுக் கெட்டிய தூரம் கடலில் பார்த்தேன். கடலில் பொங்கி வரும் அலைகளில் பார்த்தேன். உன்னை எங்கும் காணேம். அப்பொழுது இந்தத் தேசத்து ராஜகுமாரி வனஜாவும் அவள் தோழிகளும் கடற்கரைக்கு வந்தார்கள். என்னைக் கண்டு என்னேடு பேசி அரண்மனைக்கு அழைத்துப் போனர்கள். நான் என் கப்பலுக்கு நேர்ந்த புயல் விபத்தையும் அப்பொழுது நீ என்னைக் காப்பாற்றியதையும் பற்றிய பேச்சை எடுத்தாலே அவர்கள் விழுந்து விழுந்து சிரித்தார்கள். "சரியான பைத்தியம் உங்களுக்குப் பிடித்திருக்கிறது" என்று கூறிப் பரிகாசம் செய்ய ஆரம்பித்து விட்டார்கள். ஆனல் எனக்கு மாத்திரம் என் மனத்துக்குள் ஒரு திடமான நம்பிக்கை இருந்தது. அந்த நம்பிக்கை எப்படியும் ஒருநாள் உன்னைக் கண்டு பிடிக்க முடியும் என்று உறுதி கூறியது.

"நான் வானத்தில் தவழும் வட்ட மதியைப் பார்ப்பேன். அதில் உன் முகம் தெரியும். கடற்கரையில் அமர்ந்து அலைகடலைப் பார்ப்பேன். அதில் உன் முகம் தெரியும். வான வீதியில் பளிச்சிடும் நக்ஷத்திரங்களிலெல்லாம் உன்னுடைய ஆயிரம் ஆயிரம் முகங்களைப் பார்த்தேன். அரண்மனைப் பெண்களில் யாரைப் பார்த்தாலும் உன்னைப் பார்ப்பதுபோலவே இருக்கும். கடைசியில் என் அதிர்ஷ்டவசமாக இன்றைக்கு உன்னை நேரில் பார்த்து விட்டேன்!" என்று உற்சாகத்துடன் ராஜகுமாரன் சொல்லி முடித்தான்.

இதைக் கேட்ட சுந்தரி இத்தனை நேரமும் அடக்கி வைத்திருந்த சிரிப்பையெல்லாம் சேர்த்துவைத்துக் 'கலீர்' என்று சிரித்தாள்.

"வாஸ்தவமாகவே உங்களுக்குப் பைத்தியம்தான் பிடித்திருக்கிறது!" என்று சொன்னுள் சுந்தரி.

"அது இருக்கட்டும். கடல் கன்னிகையாகிய உனக்கு உண்மையாகவே என்னை அடைய வேண்டும் என்னும் ஆசை உண்டாயிற்ற?" என்று கேட்டான் ராஜகுமாரன்.

சுந்தரியின் முகம் அப்போது போன போக்கைப் பார்க்க வேண்டுமே! குபீரென்று அவளது அழகிய முகம் சிவந்து போய்விட்டது.

"இந்தப் புருஷர்களை மட்டும் நம்பவே கூடாது. அவர்களுக்கு எதிலும் சந்தேகம் வந்துவிடும்!" என்றாள் சுந்தரி மிகவும் அலுப்புடன்.

உடனே ராஜகுமாரன் கேலிப் புன்னகையுடன், "சுந்தரி, இன்னும் முழுசாக ஒரு மணி நேரம் கூட ஆகவில்லை, நாம் இருவரும் சந்தித்து! அதற்குள் உனக்குப் புருஷர்களைப் பற்றி ரொம்பத் தெரிந்துவிட்டதோ? என்னவோ ரொம்ப அலுத்துக் கொள்ளுகிருயே! அப்பப்பா! இந்தப் பெண்கள் இருக்கிறார்களே ரொம்பப் பொல்லாதவர்கள்!" என்றான்.

"நீங்கள் மாத்திரம் ரொம்ப நேரம் என்னேடு பழகிவிட்டீர்களோ? பிரமாதமாகப் பெண்களைப் பற்றி அபிப்பிராயம் சொல்ல வந்துவிட்டீர்களே! உங்களை அடைய நான்பட்ட சிரமத்தை நீங்கள் அறிந்தால் இப்படியெல்லாம் பேசமாட்டீர்கள். கடல்கன்னிகளுக்கு மானிடர்களைப் போல் உருவத்தைக் கொடுத்த கடவுள் அவர்களுக்குப் பேசும் சக்தியையும் நடப்பதற்குக் கால்களையும் கொடுக்கவில்லை. என் உருவத்தை மாற்றிக் கொள்ள நான் செய்த யோசனையும் முயற்சியும் கொஞ்சம் அல்ல. என் பாட்டியின் யோசனைப்படி ஆழ்கடலில் ரொம்ப தூரம் நீந்தி ஒரு முனிவரின் கருணையால் இந்த உருவத்தை அடைந்தேன். ஆனல் நான் இதை அடைய நான் விட்ட கண்ணீரை மட்டும் தேக்கி வைக்க முடிந்திருக்குமானல் இந்தச் சமுத்திரத்தை விட அந்தக் கண்ணீர்த் தேக்கம் பெரிதாக இருக்கும்!" என்றாள் சுந்தரி கொஞ்சம் கோபத்துடன்.



"பார்த்தாயா, சுந்தரி! இப்படிக் கோபித்துக் கொள்ளலாமா? நீ புருஷர்களைப் பற்றிச் சொன்னதற்காக நானும் விளையாட்டாகப் பெண்களைப் பற்றிச்சொன்னேன். நீயும் நானும் ஒருவர் மீது ஒருவர் கொண்ட ஆசையைப் பற்றி நாமே சண்டை போட்டுக் கொள்ளுவது

சரியல்ல. சுந்தரி, இப்பொழுது ஒரு பெரிய ஆபத்து இருக்கிறது. அதை நாம் எப்படியாவது சமாளித்தாக வேண்டும்!''



"இளவரசே, அது என்ன அப்படிப் பெரிய ஆபத்து? தாங்கள் நடுக்கடலில் புயலில் சிக்கிக் கொண்டீர்களே, அதைவிடப் பெரிய ஆபத்தா?'' என்று கேட்டுவிட்டுச் சுந்தரி தன் விசாலமான கரிய கண்களால் அவனை வியப்போடு பார்த்தாள்.

ராஜகுமாரன், நான்கு புறமும் பார்த்துக் கொண்டே, "சுந்தரி, இது பெரிய விபத்து. சொல்கிறேன் கேள். இந்த ஊர் ராஜகுமாரி வனஜா என்னைக் காதலிக்கிறாள். அவளும் அழகி தான். ஆனாலும் உன்னிடம் என் மனசைப் பறி கொடுத்த பின்பு அவளுக்கு நான எப்படி என் மனசில் இடந்தர முடியும்? இந்த ஊர் அரசனுக்கும் என்னை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள மிகவும் விருப்பமாயிருக்கிறது. ஆனால் என் மனம் இது விஷயத்தில் துளிக்கூடச் சம்மதப்படாது! உன்னைப் பற்றி நான் அரசனிடம் சொன்னபோது அரசனும் நம்பவில்லை. இப்போது நீ உண்மையாகவே கிடைத்து விட்டாய் என்று தெரிந்தால் உனக்கு ஏதாவது தீங்கு நேரிடலாம். நீ ஜாக்கிரதையாக இருக்க வேண்டும்!'' என்றான்.

சுந்தரி, "என்னை என்ன செய்ய வேண்டும் என்கிறீர்கள்?" என்றாள்.

ராஜகுமாரன், "சுந்தரி, நீ இன்று மாத்திரம் அரண்மனை நந்தவனத்து வஸந்த மண்டபத்திலேயே இரு. இந்த ஊர் அரசன் அதை நான் வசிப்பதற்குக் கொடுத்திருக்கிறான். ஆகையினால் அங்கே யாரும் வரமாட்டார்கள். நாளைக்குச் சமயம் பார்த்து உன்னை அரசனிடம் அழைத்துப் போகிறேன்!'' என்றான்.

"இளவரசே, நாம் எதற்காக இந்த ஊர் அரசனுக்குப் பயப்பட வேண்டும்? நீங்களும் ஒரு அரசகுமாரன் தானே? உங்களை இந்த ஊர் அரசன் என்னசெய்துவிட முடியும்? நாம் இருவரும் நாளைக்கே உங்கள் தகப்பனார் ஊருக்குக் கப்பல் சம்பாதித்துக் கொண்டு போனால் என்ன?''

"சுந்தரி, குழந்தை மாதிரி பேசுகிறாயே! இந்தப் பூவுலகத்துக்கே நீ புதிதாக வந்திருப்பதனால் உனக்கு ஒன்றும் தெரியவில்லை. சமுத்திர லோகத்தில் நீ மனம் போனபடி சஞ்சரித்த மாதிரி இங்கே சஞ்சரிக்க முடியாது. நான் எங்கள் ஊருக்குத்தான் ராஜா. இங்கே இந்தத் தேசத்து ராஜாவுக்கு அடங்கித்தான் நடக்க வேண்டும். அவன் அனுமதியில்லாமல் நாம் வெளியேறினால் நம்மை அவன் கைது செய்யலாம். அரசன் உத்தரவில்லாமல் நாம் கப்பலில் ஏற முடியாது. மேலும் வனஜாவை நிராதரவாக விட்டுவிட்டுப் போகக்கூடாது. அவளுக்காகவே நீ கொஞ்சம் மறைந்திருக்க வேண்டும். அவள் மனதைத் தெரிந்துகொண்டு தான் அரசனிடம் உன்னைப் பற்றிப் பிரஸ்தாபிக்க வேண்டும்!'' என்றான் ராஜகுமாரன்.

"இளவரசே, என்னால் உங்களுக்கு எத்தனை கஷ்டம்? வனஜாவை மணந்து கொண்டால் இந்த ராஜ்யமே உங்களுக்குக் கிடைக்கும். என்னைக் கல்யாணம் செய்து கொள்ளுவதனால் உங்களுக்கு என்ன லாபம்!'' என்று சுந்தரி கண்ணீர் உகுத்தாள்.

ராஜகுமாரன் அவளை அணைத்துக் கொண்டு கண்ணீரைத் துடைத்து, "சுந்தரி, வீணாக வருத்தப் படாதே, எல்லாம் சரியாகி விடும். கடலில் வாழ்ந்த நீயே மானிடப் பெண்ணாகி விட்டாயே! இது கொஞ்சங் கூட நம்ப முடியாத காரியம் இல்லையா? நமக்கு இனி என்ன சிரமம் இருக்கப் போகிறது?'' என்றான்.

பிறகு இருவரும் வஸந்த மாளிகைக்குச் சென்றார்கள். (தொடரும்)

## நீங்கள் உங்கள் பற்களை

# இன்று மக்ளீன் செய்தீர்களா?



வருஷக் கணக்காக நான் மக்ளீன்ஸ் உபயோகித்து வருகிறேன். என் பற்கள் அழகாகவும் வெண்மையாகவும் இருக்கின்றன. நான் வேறு எந்த டூத் பேஸ்டும் உபயோகிக்க மாட்டேன்.

வாயைச் சுத்திகரித்து
மூச்சின் நாற்றத்தை
போக்குகிறது

உமிழ்நீர்
கெடுதலைத் தடுத்து
ஈறுகளைப் பாதுகாக்கிறது.

மேலே உள்ள கறைகளை அகற்றி
பற்களுக்கு
**வெண்மை**
தருகிறது.

பளபளப்பாகவும் கவர்ச்சிகரமாகவும் தோன்றும் பற்களே அனைவருக்கும், அத்துடன் அதிகமான சுத்தமும் பாதுகாப்பும் தரத் தக்கதுமான டூத்பேஸ்ட் உங்களுக்கு வேண்டுமானால் மக்ளீன்ஸ் பெராக்ஸைட் டூத்பேஸ்டையே உபயோகியுங்கள்.

பிரத்யேகமானதும் பிறர் பின்பற்ற முடியாததுமான தயாரிப்பு இது. வாயின் ஊறும் உமிழ்நீர் மூலம் பல் சொத்தை பிடிப்பதையும் பல்லோல பாசி படருவதையும் மக்ளீன்ஸ் தடுத்து உதவுகிறது. பல்லின்மீது விசாலமான கறை படிந்திருந்தால் அதை அகற்றிவிடும். பற்களை வெண்மையாக்கி, பளபளக்கச் செய்து வசீகரத்தை கவர்ச்சியுடையதாக்குகிறது.

**இன்றே மக்ளீன்ஸ் வாங்குங்கள்!**



# டாக்டர் நாதன்

**அம்மு**

டாக்டர் நாதன் தம் அறையில் உட்கார்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்தார். அவர் பிரபல டாக்டர். ஓய்ச்சல் ஒழிவில்லாத வேலை. அவரை ஏழைகள் பார்க்க முடியாது. பணக்கார நோயாளிகளின் கார்கள் எப்பொழுதும் அவர் பங்களா வாசலில் நின்று கொண்டிருக்கும். புகழ் பரவப் பரவப் பணம் குவியக் குவிய, அவர் பணம் கொடுத்தால் தான் வெளிக் கிளம்புவது என்ற கொள்கையைக் கடைப்பிடிக்கத் தொடங்கினார். ஏழைகள் அவரைப் பார்ப்பதே துர்லபம் என்றால், அவரிடம் வைத்தியம் செய்துகொள்வதெப்படி! இருந்த போதிலும் ஏழை ஜனங்கள் அவர் வைத்தியத் திறமையைக் கேள்விப்பட்டு ஆஸ்பத்திரி வாசலில் தவம் கிடந்தனர். அந்த ரீதியில்தான் அந்தக் கிழவனும் வந்திருந்தான். தன் பரிதாப நிலைமையை எடுத்துச் சொல்லி யமனுடன் போராடும் குழந்தையைப் பற்றிச் சொன்னால் டாக்டர் மனம் இரங்கமாட்டாரா என்று சபலம் அவனுக்கு. வீட்டில் குழந்தை எப்படி யிருக்கிறதோ என்ற கவலை வேறு! டாக்டர் உள்ளே யிருக்கும் நோயாளிகளைக் கவனிப்பதும் 'டாக் டாக்' என்று அங்குமிங்கும் போவதுமா யிருந்தார். காத்துக் காத்துக் கிழவன் அலுத்துப் போனான். 'எங்கே நாம் டாக்டரைப் பார்க்கப் போகிறோம்! கடவுள் விட்ட வழி விடுகிறார். எழுந்து போய் விடுவோமா!' என்றுகூட எண்ணினான். ஆயினும் மனம் கேட்கவில்லை.

பாவம், வயதான கிழவன்! காலையில் அரை வயிற்றுக் கஞ்சி சாப்பிட்டதுதான். பிறகு ஒரு மைல் நடந்து டாக்டர் வீட்டுக்கு வந்தான். அப்படி நடந்து வரும்பொழுதே அவன் சாப்பிட்ட கஞ்சி ஜீரணமாகிப் பசி எடுக்கத் தொடங்கி விட்டது. அந்தப் 'பூஞ்சை' சரீரம் எத்தனைதான் தாங்கும்! உட்கார்ந்து கொண்டே தூங்கி வழிந்தான். ஒரு தூக்கம் தூங்கி விழித்துக் கிழவன் ஜன்னல் வழியாக உள்ளே பார்த்தபோது ஜனங்கள் யாரையும் காணோம். ஆஸ்பத்திரி காலியாக இருந்தது. டாக்டர் வெளியே செல்ல ஆயத்தம் செய்து கொண்டிருந்தார்.

இதுதான் சமயமென்று கிழவன் சங்கோசத்துடன் உள்ளே சென்றான். டாக்டர் அவனைப் பார்த்தார். அவர் பார்க்கும் தோரணை 'ஏன் உள்ளே வந்தாய்!' என்று கேட்பதுபோலிருந்தது. இருந்தபோதிலும் கிழவன் தைரியத்தை விடாமல் அவர் அருகில் சென்று நடுங்கும் குரலில் "டாக்டர் ஐயா! என் பேரப்பிள்ளை கண்ணைத் திறக்காமல் ஜுரமாகக் கிடக்கிறது! நீங்க வந்து பார்க்க வேணும்! எல்லாரும் உங்களைப் பற்றிச் சொன்னாங்க......!" என்றான்.

டாக்டர் இடைமறித்துக் கேட்டார்: "சரி; உன் வீடு எங்கே யிருக்கிறது!"

"ஒரு மைலுக் கப்பால் இருக்கிறது!"

"என் வேலை யெல்லாம் போட்டு விட்டு ஒரு மைலுக் கப்பாலிருக்கும் உன் வீட்டுக்கு வந்தால் 'விஸிட்டிங் சார்ஜ்' கொடுப்பாயா! அப்புறம் மருந்துக்கு வேறு 'பீஸ்'......!"

"அதுக்கெல்லாம் ஏதுங்க என்னிடம் பணம்! நான் பரம ஏழை! உங்கள் தர்மத்திலே......!" கிழவன் தன் பல்லுப் போன வாயைக் காட்டிக்கொண்டு கைகளைப் பிசைந்து கொண்டான்.

இதைக்கேட்டு டாக்டர் சிரித்துக்கொண்டே, "ஓஹோ! வெறுங்கையோடு வந்து பல்லைக் காட்டினால் ஓடிவந்து விடுவேன் என்று நினைத்தாயா! என் தர்மம் வேண்டாம்! 'கவர்ன்மெண்ட்' ஆஸ்பத்திரி தர்ம ஆஸ்பத்திரிதான். அங்கே கொண்டு போய்க் காண்பி. எனக்கு நின்று பேசக்கூட நேரமில்லை!" என்று கூறி விட்டு வெளியே சென்றார். 'சாமி, சாமி' என்று கிழவன் கெஞ்சியதை அவர் காதில் போட்டுக் கொள்ளவே யில்லை. காரில் பறந்து விட்டார்.

கிழவனுக்கு ஏற்பட்ட துக்கமும் கோபமும் கணக்கு வழக்கில்லை.

"பெரிய டாக்டர்! எந்த வீட்டு வாசற்படி ஏறினாலும் அந்த வீட்டிலிருக்கும் வியாதி பறந்து விடும் என்கிறாங்க! ஏழைக்கு மாத்திரம் இரங்க மாட்டாரு போலிருக்கு!" என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டு முன் பக்கத்துப் பெஞ்சியில் வந்து உட்கார்ந்தான். பலஹீனத்தாலும் ஆத்திரத்தாலும் அவன் உடல் நடுங்கியது. நாலடிகூட நடக்கமுடியாது என்று அவனுக்குத் தோன்றியது. சற்றுச் சிரமபரிகாரம்செய்துகொள்ள எண்ணிப் பெஞ்சியில் கால்களை நீட்டிக் கொண்டு படுத்து, 'அப்பாடா!' என்று பெருமூச்சு விட்டான். அவன் இமைகள் தானாகச் செருகிக் கொண்டன. அவனையும் மீறிவந்த களைப்பு தூக்கத்தில் ஆழ்த்திவிட்டது. ஐந்துநிமிஷமோ, அல்லது பத்து நிமிஷமோ தூங்கி யிருப்பான். யாரோ தன்னை அதட்டி எழுப்புவதைக் கேட்டுக் கிழவன் திடுக்கிட்டு எழுந்தான். எதிரே ஒரு யுவதி நின்று கொண்டிருந்தாள். கிழவன் அவசர அவசரமாக எழுந்து நின்று மன்னிப்புக் கோரும் பாவனையில், "டாக்டரைப் பார்ப்பதற்காக வந்தேனுங்க! ரொம்பத் தள்ளாமையாக இருந்தது. அப்படியே படுத்துத் தூங்கி விட்டேனுங்க!" என்றான்.

கிழவன் எதிர்பார்த்தது போல் அந்தப் பெண்மணி அவனை மிரட்டவில்லை. சாந்தமாகவே, "ஓஹோ! களைப்பா யிருந்தால் சும்மா உட்கார்ந்து கொள். இல்லையென்றால் படுத்துக் கொள்! பாவம், ரொம்ப தள்ளாதவனா யிருக்கிறயே!" என்று அநுதாபத்துடன் கூறினாள்.

அவள் சொன்னதும் கிழவன் நிற்க முடியாமல் உட்கார்ந்து கொண்டான். "எங்கிருந்து வருகிறாய்! வெகு தூரத்திலிருந்து வருகிறாயா!" என்று விசாரித்தாள் அந்த ஸ்திரீ.

"ஒரு மைலுக்கு அப்பாலிருந்து வருகிறேன், அம்மா! வீணாகக் கவலையை விலைக்கு வாங்கிக் கொண்டேன்! என் மகள் அருப்புக் கோட்டை

யில் இருக்கிறான். அவன் வீட்டுக்குப் போனேன். திரும்பி வரும்போது பேரப்பயல் என்னோடு வருவேன் என்று பிடிவாதம் பிடித்தான். நாலு நாளைக்கு நம்மிடம் இருக்கட்டுமே என்று அழைத்து வந்தேன். வந்த நாளிலிருந்து பிள்ளைக்குக் கண்ணைத் திறக்காமல் ஜுரம். எந்த மருந்துக்கும் சரிப்படவில்லை. அப்புறம் அக்கம் பக்கத்து ஜனங்கள் இந்த டாக்டர் ஐயாவைப் பற்றிச் சொன்னாங்க......! ஆகவே தான் இங்கே ஓடி வந்தேன்!'' என்று பேச முடியாமல் திணறி நடுவில் நிறுத்தினான். மீண்டும் துக்கத்துடன் கூறினான். ''என் மருமகன் பொல்லாப் பயல்! பிள்ளைக்கு உடம்பு சரியில்லை என்பது தெரிந்தால் என்னைக் கொன்று விடுவான்...!''

''டாக்டரைப் பார்த்து விட்டாயா! இல்லை. இனிமேல் தான் பார்க்கணுமா...!'' என்று கேட்டாள் அந்தப் பெண்மணி.

''பார்த்து விட்டேன் அம்மா! 'பீஸ் இல்லாமல் வர முடியாது. தர்ம ஆஸ்பத்திரிக்குப் போ' என்று சொல்லிவிட்டார். கடவுள்தான் பிள்ளையைக் காப்பாற்றணும்!'' என்று ஆகாயத்தை நோக்கிக் கும்பிட்டான்.

அந்தப் பெண்மணி மேலும் கேள்விகள் கேட்கவில்லை. அவன் நிலைக்கு வருத்தப்படுபவள் போல் முகத்தை வைத்துக்கொண்டாள். ''சரி! நீ கொஞ்ச நேரம் இந்தப் பெஞ்சியிலே படுத்துக் கொண்டிருந்து விட்டு அப்புறம் போ! இந்த வெய்யிலில் போகவேண்டாம்!'' என்று இரக்கத்துடன் கூறிவிட்டு உள்ளே போய்விட்டாள். கிழவன் 'சம்போ மகாதேவா' என்று சொல்லிக் கொண்டே பெஞ்சியில் படுத்துக் கொண்டான். தன்னிடம் பேசிய அவள் யார் என்பதைப் பற்றியெல்லாம் அவன் சிந்திக்கவில்லை. அவன் களைப்பும் கவலையும் எந்த யோசனைக்கும் இடம் கொடுக்கவில்லை. சற்று நேரம் உறங்கிய பிறகு தள்ளாடித் தள்ளாடி வீட்டை நோக்கி நடந்தான். அவன் சென்ற கொஞ்ச நேரத்திற்கெல்லாம் டாக்டர் நாதனின் மனைவி விஜயா-சற்று முன் கிழவனுடன் பேசிவிட்டு உள்ளே சென்றவள் - அவன் இன்னும் படுத்துக் கொண்டிருக்கிறானா என்று பார்ப்பதற்காக வெளியே வந்தாள். பெஞ்சி காலியாயிருப்பதைக் கண்டதும் தெருவை அப்படியும் இப்படியும் ஓர் பார்வை பார்த்துவிட்டு மீண்டும் பெஞ்சியை நோக்கினாள். ''இருந்தாலும் இவருக்கு இவ்வளவு பண ஆசை உதவாது! ஏழைகள் என்றால் இரங்க வேண்டாமா! நமக்கென்ன காசு பணத்தில் குறைச்சலா, பரதேசிகளிடம் 'விஸிட்டிங்' பீஸ் வாங்க!'' என்று முணுமுணுத்தாள். பிறகு ''அவர் வரட்டும் சொல்கிறேன்!'' என்று கறுவிக் கொண்டே உள்ளே சென்றாள்.

டாக்டர் நாதன், தன் பெரிய பங்களாவின் முன் பக்கத்தில் ஆஸ்பத்திரியை ஏற்படுத்திக் கொண்டு பின் பக்கத்தை வாசஸ்தலமாக்கிக் கொண்டிருந்தார். வீட்டு வேலை செய்த நேரம் போக, மற்றச் சமயங்களில் விஜயா, ஜன்னல் வழியாகக் கணவர் நோயாளிகளைப் பரீக்ஷிப்பதைக் கவனித்துக் கொண்டிருப்பாள். ஏழைகள் வந்தால் அவர் சிடுசிடுத்து அனுப்புவதையும் பார்த்திருக்கிறாள். அப்பொழுதெல்லாம் அவள் மனம் கஷ்டப்படும். 'வைத்தியத்தில் எவ்வளவு கெட்டிக்காரராயிருந்துதான் என்ன! கெஞ்சிக் கொண்டு வருகிறவர்களை இப்படி விரட்டியடிக்கிறாரே!' என்று மனதுக்குள் புலம்புவாள். ஆனால் இதை அவரிடம் சொல்லத் தைரியமில்லை. எத்தனையோ தடவை சொல்லிவிட வேண்டுமென்று மனதைத் திடப்படுத்திக் கொண்டும் இருக்கிறாள். ஆனால் அவரைப் பார்க்கும் பொழுது அந்த நினைவு நழுவிவிடும். ''என்ன விஜயா தேவி!'' என்று அன்புடன் அவர் கூப்பிட்டுக்கொண்டு வரும் பொழுது அவள் தன்னையே மறந்துவிடுவாள்.

'இன்று தள்ளாத இந்தக் கிழவனைப் பார்த்த பிறகு அவளுக்கு மனம் தாங்கவில்லை. உயிர் போகும் தருணத்தில் கூடப் பணம் கொடுத்தால் தான் வருவேன் என்று சொல்வது மனிதத் தன்மையாகுமா என்று நினைந்து வருந்தினாள். உள்ளே சென்ற அவளுக்கு வேலையில் புத்தி செல்லவில்லை. அவர் வந்ததும் தன் மனதிலிருப்பதைச் சொல்லிவிட வேண்டு




மனைவி:—ஆசையாக மைசூர்ப் பாகு பண்ணிக் கொண்டு வந்து கொடுத்தால், சுத்தி கொண்டு வா என்று சொல்லிக் கேலி பண்ணுகிறீர்களே!

கணவன்:—கேலியாவது? இந்த நாற்காலியிலிருக்கும் ஆணியை அடிப்பதற்காகச் சுத்தி கேட்டால் நீ என்னவோ சொல்லுகிறாயே! அப்படி உனக்குக் கோபமாக இருந்தால், நான் இந்த மைசூர்ப் பாகாலேயே அடித்து விடுகிறேன்.



மென்று துடித்தான். அதனால் அவருக்கும் தனக்கும் என்ன கசப்பு வந்தாலும் சரி என்று நிர்மானித்தான்.

★

'டாக்டர் நாதன்' என்று இப்பொழுது அழைக்கப்படும் வைத்தியநாதன் அப்பொழுது - அதாவது வைத்தியப் பட்டம் பெற்று வெளிக் கிளம்பிய பொழுது மிகவும் எளிய முறையில் ஒரு 'டிஸ்பென்ஸரி' திறந்தார். ஆரம்பத்தில் ஒருடாக்டர் எப்படி தம் புகழுக்காகவும், பணத்துக்காகவும் பாடுபடுவாரோ, அப்படியே வைத்தியநாதனும் பாடு பட்டார். அஷ்ட தரித்திரனாயிருந்தாலும், தெருவோடு செல்லும் பிச்சைக்காரனாயிருந்தாலும் தலை வலிக்கிறது என்று கூப்பிட்டால் உடனே கைப்பெட்டியும் கையுமாக 'ஸ்டெதஸ்கோப்பும்' கழுத்துமாக அவன் வீட்டுக்கு ஓடுவார். எப்படியாவது தனக்கு வைத்தியத்தில் நல்ல அநுபவம் ஏற்பட்டு நற்பெயர் கிடைத்தால் போதும் என்ற ஒரே எண்ணம் தான் அப்பொழுது அவர் உள்ளத்திலே மேலோங்கி நின்றது. ஏழை எளியவர்கள் டாக்டர் நாதன் வீட்டு வாசலில் கூட்டம் போடுவார்கள். அவர்கள் பணம் கொண்டு வராவிட்டாலும் அவர்களுடைய எண்ணிக்கையைப் பார்த்து டாக்டர் பூரித்துப்போவார். தனக்கு நல்ல 'எதிர்காலம்' இருக்கிறது என்று நம்பிக்கை கொள்வார்.

அவருடைய நம்பிக்கை வீண் போகவில்லை. திடீரென்று அதிர்ஷ்டம் ஓர் பெரிய மனிதரின் மூலம் அடித்தது. எல்லா டாக்டர்களாலும் கைவிடப்பட்ட அந்தப் பெரிய மனிதரின் உறவினர்கள் கடைசியாக டாக்டர் நாதனைப் பிடித்து அழைத்துக்கொண்டு போனார்கள். டாக்டர் நாதன் தன் திறமை பூராவும் காண்பித்து சிகித்ஸை செய்தார். ஊரே பிரமிக்கும் வண்ணம் அந்த மனிதர் பிழைத்தார். அவ்வளவுதான்! டாக்டர் நாதனின் பெயர் மூழங்கத் தொடங்கியது. பிரபுக்கள் அவரைத் தங்கள் குடும்ப வைத்தியராக அமர்த்திக் கொண்டனர். யாராயிருந்தாலும் டாக்டர் நாதனைக் கார் வைத்து அழைத்துச் சென்றனர். நகரத்தில்அவர் கீர்த்தி பரவியது போதாது என்று அண்டை அயல் கிராமங்களிலிருந்தும் அவரை அழைத்துப் போகக் கார்கள் வந்தவண்ணமிருந்தன. கடைசியில் அவரே சொந்தக் கார் வாங்கினார்; பங்களா வாங்கினார்; பாங்கில் பணம் சேர்ந்தது. அவரைச் சுற்றி எங்கு பார்த்தாலும் பணம், பணம், பணம்! பணத்திலேயே புரண்டார். அப்புறம் அவருக்கு ஏழைகளை நினைக்க நேரமில்லை. அவர் வாசலில் வந்து நிற்கும் ஏழை ஜனங்களின் எண்ணிக்கை தேய்ந்து கொண்டே வந்து மறைந்தது. ஏழைகள் அவர் ஆஸ்பத்திரியின் கேட்டுக்கருகில் வரக்கூடப் பயப்பட்டார்கள். நாதனுக்கு ஏழைகளின் தொடர்பே விட்டுப்போயிற்று.

★

எப்பொழுது கணவர் வரப்போகிறார் என்று காத்துக் கொண்டிருந்தாள் விஜயா. எங்கேயோ ஒரு கனவானுக்குத் தலைவலி என்று போயிருந்த நாதன் அவருடன் மணிக்கணக்காக அரட்டை அடித்துவிட்டு வீட்டுக்கு திரும்பினார். அவர் சற்றுச் சிரமபரிகாரம் செய்து கொண்டதும் விஜயா சொல்ல ஆரம்பித்தவள் பயந்து தயங்கினாள். இதைக் கண்ட டாக்டர் கொஞ்சலாக, "இதென்ன, நீ இப்படி சங்கோசப்படுகிறாய்! பயந்து கொண்டே கேட்க வேண்டிய அவசியமேயில்லை! நீதான் என் தேவியாயிற்றே!" என்றார்.

விஜயா சற்றுத் தைரியமடைந்து, "ஒன்றுமில்லை! வந்து...இன்று வந்த அந்த ஏழைக் கிழவனை விரட்டியது என் மனத்துக்கு ரொம்பவும் கஷ்டமாக இருக்கிறது. பாவம், அவன் ரொம்ப அழுதான் ......" என்று கூறி நிறுத்தினாள்.

இதைக்கேட்டு நாதன் சிரித்தார். அவர் கோபிக்காமல் சிரிப்பதைக் கண்ட விஜயா மேலும் தைரியமடைந்து, நினைவிருக்கிறது என்று எல்லோரும் சொல்லும்படியாக முன்பெல்லாம் ஏழைகளுக்கு வைத்தியம் செய்து கொண்டிருந்தீர்கள். இப்பொழுது அவர்கள் என்ன கெஞ்சினாலும் இரங்கமாட்டேன் என்கிறீர்கள்! நமக்கென்ன பணத்துக்குக் குறைச்சலா! ஒரு மைல் தூரம் காரில் சென்று வருவது என்ன பிரமாதம்! எத்தனையோ நாளாக உங்களிடம் இதைச் சொல்லவேண்டுமென்பது! ஆனால், உங்களைப் பார்க்கும் பொழுதெல்லாம் எனக்கு தைரியம் ஏற்படுவதில்லை......" என்றாள்.

டாக்டர் முகத்தை ஒருமாதிரியாக வைத்துக் கொண்டார். சிரிப்பு மறைந்தது. விஜயா சற்று பீதியடைந்தாள். 'தன்னிடம் கோபித்துக் கொண்டு விட்டாரோ; நாம் எதற்குச் சொன்னோம்!' என்று வருந்தினாள். கலவரத்துடன் அவர் முகத்தை நோக்கினாள். டாக்டரின் வாயிலிருந்து நிதானமாக வார்த்தைகள் வருவதைக் கண்டு விஜயா நிம்மதியடைந்தாள்.

"இந்த விஷயங்களைப் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாது, விஜயா! முன்போலவே ஏழைகளின் குடிசைக்கு ஓடிக் கொண்டிருந்தால் நாம் நடுத்தெருவிலேயே நிற்க வேண்டியது தான்! வீட்டுக்கு வருவதற்கே பொழுது இருக்காது! அந்தந்தக் காலத்துக்குத் தகுந்தாற்போல் நாம் நம்மை மாற்றிக் கொண்டே போக வேண்டும்" என்றார்.

விஜயாவுக்கு அவர் சொல்வது அவ்வளவு சரியாகப் படாவிட்டாலும் மேலும் அவருடன் தர்க்கம் செய்ய விருப்பமில்லாமல், "ஏதோ அந்தக் கிழவன் அழுதது ரொம்பக் கஷ்டமாக இருந்தது. அதனால் சொன்னேன்!" என்றாள்.

"இப்படியெல்லாம் அழுகைக்கு இரங்குவது என்றால் வைத்தியத் தொழிலையே விட்டுவிட வேண்டியதுதான். சிகிச்சை செய்யும் பொழுது நோயாளிகள் அழுகிறார்கள். உடனே அநுதாபப் பட்டுக்கொண்டு பேசாமல் இருந்து விடுவதா! இதையெல்லாம் பற்றி உனக்கு ஒன்றும் தெரியாது, விஜயா! பேசாமலிரு!" என்றார் டாக்டர் நாதன். அதற்குமேல் விஜயா இந்த விஷயத்தைப் பற்றிப் பேசாமல் வேறு ஏதோ பேசத் தொடங்கினாள். இருந்தபோதிலும் அவள் மனது சமாதான மடையவில்லை. அவளுக்குத் தன் கணவரின் போக்கு நியாயமாகப் படவில்லை. அவர் ஏதோ பாபம் பண்ணுவதுபோல் மனம் நொந்தாள்.

"இந்தக் கிழவனைப்போல் எத்தனை ஏழைகள் வருகிறார்கள்! யமனுடன் போராடும் உயிரைக் காப்பாற்ற வேண்டும் என்பதற்காகத்தானே கடவுளைத் தேடி வருவதுபோல் வந்து கெஞ்சுகிறார்கள்! அவர்களை நிர்த்தாக்ஷிண்யமாக இப்படித் திருப்பி அனுப்பினால் அவர்கள் மனம் எவ்வளவு நொந்துபோகும்! அவன் பணப் பைத்தியத்தில் இடி விழ!' என்று வயிறெரிந்து வையமாட்டார்களா!"—தினம் இம்மாதிரியே தனக்குள் பேசிக்கொண்டு விஜயா பைத்தியம் பிடித்தவள் போலானாள். நமக்கென்ன என்று அலட்சியமாக இருக்க முயன்ற போதிலும் திரும்பத் திரும்பப் பல ஏழைகள் அவள் முன் நின்று பிரலாபிப்பதுபோல் தோன்றியது. ஆனால் டாக்டர் நாதன் தன் மனப்படியே சென்று கொண்டிருந்தார். வெறுப்புற்ற விஜயா சில நாட்களுக்காவது பிறந்த வீட்டுக்குச் செல்ல எண்ணினாள்.

விஜயாவின் பிறந்தகம், அந்த ஊருக்கு ஆற்றுக்கு அக்கரையில் இருந்தது. நினைத்தால் ஓர் படகில் சென்று மறு படகில் திரும்பிவிடலாம். ஆனால் இந்தத் தடவை அவள் கொஞ்ச நாள் பிறந்தகத்திலேயே 'டேரா'வைப் பலமாக அடித்துவிடத் தீர்மானித்தாள். அதன்படியே கணவரிடம் விடை பெற்றுக்கொண்டு பிறந்த வீட்டுக்குச் சென்றாள்.

அவள் சென்ற பிறகு டாக்டர் ஆஸ்பத்திரியையே தம் வாசஸ்தலமாக்கிக் கொண்டார். பின்கட்டுப் பக்கமே அவர் போவதில்லை. விஜயாவிடம் அவருக்கு அசாத்தியமான அன்பு. ஆதலால் அவருக்கு அவள் இல்லாத இடம் சூன்யமாகக் காணப்பட்டது. என்றுமில்லாமல் அவள் பிறந்த வீட்டில் அதிக நாள் தங்கிவிட்டது அவருக்கு ஆச்சரியமா யிருந்தது.

பகல் இரண்டு மணியிருக்கும். இன்னும் சிறிது நேரத்துக்கெல்லாம் 'டிரஸ்' செய்து கொண்டு கேஸ்களை கவனிக்கச் செல்லவேண்டும். கொட்டாவி விட்டுக்கொண்டே எழுந்தார். அவர் எழுந்து நின்றதும் ஓர் ஆள் அவசர அவசரமாக ஓடிவந்தான். பரபரப்புடன் "சாமி, சாமி! நான் ஆற்றங் கரையிலே துணி துவைத்துக் கொண்டிருந்தபோது ஒரு பெண் பிள்ளை தண்ணீரிலே முழுகி ஆற்றோடு போச்சு, சாமி! எடுத்துக் கரையிலே போட்டிருக்கிறேன்! நினைவில்லாமல் கிடக்கிறது! ஒரே ஓட்டமாக ஓடி வந்தேன், சாமி! நீங்க உடனே வரணும்!" என்றான்.

அவன் பரபரப்பை டாக்டர் லட்சியமே செய்யாமல் சாவதானமாக, "ஆற்றங்கரை என்றால் எங்கே!" என்று கேட்டார்.

"கிழக்கே படித்துறையெல்லாம் தாண்டி முனியப்பன் தோப்பைத் தாண்டி ராசப்பன் தோப்பைத் தாண்டி....இங்கிருந்து கொஞ்சம் தூரம் தானுங்க! இருந்தாலும் நீங்கள் மனம் வைத்தால் காரிலே ஒரு நிமிஷத்தில் போய் விடலாம், சாமி!" என்று வந்தவன் தவியாய்த் தவித்தான்.

டாக்டர் அலட்சியமாக, "சரிதான்! சும்மா 'சாமி, சாமி' என்று உயிரை வாங்காதே! எனக்கு அந்தத் தோப்பைத் தாண்டி, இந்தத் தோப்பைத் தாண்டி ஆற்றங்கரைக்கு வர இப்பொழுது நேரமில்லை! நீ வேறு எந்த டாக்டரையாவது அழைத்துக் கொண்டு போ!" என்று கூறிவிட்டு 'டிரஸிங்' ரூமுக்குச் சென்றுவிட்டார்.

வந்தவன் பிரமை பிடித்தாற் போல் ஒரு நிமிஷம் நின்றுவிட்டு மறுபடியும் இன்னொரு டாக்டர் வீட்டுக்கு ஓடினான். டாக்டர் நாதன் 'டிரஸ்' செய்து கொண்டிருக்கும் பொழுது ஒரு நண்பர் வந்து விட்டதால் அவருடன் பேசத் தொடங்கினார். ஐந்து நிமிஷமோ, பத்து





"என்னங்க! இப்போது நீங்க படித்த ஹாஸ்யத் துணுக்குக்கு ஷஷ்டியப்த பூர்த்தி ஆகியிருக்கும் போலே யிருக்கே!"

"அப்படின்னு புரியவில்லையே!"

"இதோடு இந்தத் துணுக்கு அறுபது தடவை சொல்லியாகி விட்டதே! அதனால்தான் ஷஷ்டியப்த பூர்த்தின்னு சொன்னேன்!"

---

நிமிஷமோ, பதினைந்து நிமிஷமோ ஆகியிருக்கும்; ஆஸ்பத்திரி வாசலில் ஓர் கார் வந்து நின்றது. அதிலிருந்து அவ்வூர் மற்றொரு டாக்டரான சுதர்சன் இறங்கினார். பின் வீட்டிலிருந்து இரண்டு ஸ்திரீகள் ஒரு பெண்மணியைத் தூக்கிக் கொண்டு இறங்கினர்.

இதைக் கண்ட டாக்டர் நாதன் தம் இருப்பிடத்தை விட்டு எழுந்து வராந்தாவுக்கு வந்தார். அதற்குள் காரிலிருந்து இறங்கியவர்கள் நெருங்கிவிட்டனர். நினைவிழந்து பிரால் தூக்கிவரப்படும் அந்த ஸ்திரீயைப் பார்த்தபொழுது டாக்டர் நாதன் மூர்ச்சை போடும் நிலைக்கு வந்துவிட்டார். "ஐயோ, இதென்ன!" என்று அலறிக்கொண்டு முன்னோக்கி ஓடினார். அவர் மனைவி விஜயாவைத்தான் அவர்கள் தூக்கிக் கொண்டு வந்தார்கள். "என்ன விஷயம், மிஸ்டர் சுதர்சன்! எனக்கொன்றும் புரியவில்லையே!" என்று பரபரப்புடன் கேட்டார்.

"எல்லாம் சாவகாசமாகப் பின்னால் சொல்கிறேன்! முதலில் சிகிச்சையை ஆரம்பிப்போம்!" என்றார் வந்தவர். பிறகு டாக்டர் நாதன் தம் முழு சாமர்த்தியத்தையும் பிரயோகித்து மனைவியைக் கவனித்தார். அவள் நினைவு பெற்றாள். நாதனுக்கு உயிர் வந்தது.

டாக்டர் சுதர்சன், "ஆற்றில் மூழ்கி ஓர் பெண்பிள்ளை ஆற்றோடு போனதாகவும்' தான் அவளை இழுத்துக் கரை சேர்த்திருப்பதாகவும் வைத்திய உதவிக்கு வரும்படியாகவும் சற்று முன் ஓர் ஆசாமி வந்து கெஞ்சினான். அவன் பின்னோடு சென்றேன். அங்கே சென்று பார்த்தால் உங்கள் மனைவி என்று தெரிந்தது. உடனே, வயிற்றில் சென்றிருக்கும் நீர் வெளி வருவதற்கு வேண்டிய முறைகளைச் செய்து விட்டு இங்கு எடுத்து வந்தேன்!" என்றார்.

இதைக் கேட்ட நாதன் அவமானத்தால் தலை குனிந்தார். அவர் மனதை இந்தச் சம்பவம் சித்திரவதை செய்தது. 'ஓர் ஏழை கூப்பிடுவதை லட்சியம் செய்து ஆற்றங்கரைக்கு ஓடுவதா என்று அலட்சியம் செய்த நான் ஒரு பிரபு தலைவலிக்கிறது என்பதற்காக கூப்பிட்டால் ஓடுகிறேனே, ஆஹா! என்ன புத்தியின்மை! அந்த ஏழை என் மனைவியை அல்லவா காப்பாற்றி யிருக்கிறான்! அவன் இல்லையென்றால் அவள் ஆற்றோடு போயிருக்க வேண்டியது தானே!" என்று நெஞ்சம் குமுறினார். விஜயாவின் உபதேசம் விசுவரூபம் எடுத்து அவரை அணைத்துக் கொண்டது. ஏழைகளை அலட்சியம் செய்கிறீர்களே என்று அவள் தவித்தாள். அது அப்பொழுது அவருக்கு ஏற்கவில்லை. இன்றோ, அவள் கூறியது கடவுளின் வாக்காகப் பட்டது. தன்னை அழைக்க வந்த ஆசாமி 'தான் வரமுடியாது' என்று சொன்னதைச் சுதர்சனத்திடம் சொல்லியிருப்பானோ என்பதை அறிந்து கொள்ளும் பொருட்டு மெல்லிய குரலில் கேட்டார். "உங்களை அழைத்துச் சென்றவன் வேறு ஒன்றும் சொல்லவில்லையா!" என்று கேட்டார். சொல்லியிருந்தால் எவ்வளவு அவமானம்!

"ஹூம்! அவனுக்கு எங்கே அதையெல்லாம் சொல்ல நேரம்! என்னிடம் ஒப்படைத்து விட்டுத் தன் வேலையைப் பார்க்கப் போய் விட்டான்!" என்றார் டாக்டர் சுதர்சன். நாதனின் மனம் சற்று நிம்மதி அடைந்தது. சிறிது நேரத்திற்கெல்லாம் சுதர்சன் விடை பெற்றுக்கொண்டு சென்றுவிட்டார்.

நாதன் மனைவியின் அருகில் சென்று உட்கார்ந்தார். விஜயா கண் விழித்து நாற்புறமும் மிரள மிரள விழித்தாள். கணவரைக் கண்டதும் "நான் நம் வீட்டிலா இருக்கிறேன்! குளித்துக்கொண்டிருந்தேனே, இங்கு எப்படி வந்தேன்!" என்று பலஹீனமான குரலில் கேட்டாள். நாதன் நடந்த விஷயத்தைக் கூறினார். ஆனால், தான் வண்ணானிடம் வர முடியாது எனக் கூறியதை மாத்திரம் மறைத்து விட்டார். பிறகு விஜயாவிடமிருந்து அவள் மூழ்கிப் போனது எப்படி என்பதைத் தெரிந்து கொண்டார். ஆற்றங்கரைக்கு அக்கரையில் பிறந்த வீட்டிலிருந்த விஜயா குளிப்பதற்காகத் தனிமையில் நதிக்குச் சென்றிருக்கிறாள். நீச்சல் அடிப்பதில் விருப்பமுள்ளவள். ஓர் சுழல் அவளைச் சுழற்றி நீரோட்டத்துடன் அனுப்பிவிட்டது. வெகு தூரம் வந்த பிறகு இக்கரையில் துணி துவைத்துக் கொண்டிருந்த ஒருவன் அவளைப் பார்த்துக் காப்பாற்றியிருக்கிறான். டாக்டர் நாதன் உடனே விஜயாவின் பெற்றோர்களுக்குத் தகவலைத் தெரிவித்துச் சமாதானப் படுத்தினார்.

விஜயா உடம்பு குணமாகி எழுந்ததும் தன் கணவரிடம் ஓர் ஆச்சர்யமான மாறுதலைக் கண்டாள். ஏழை பணக்காரர் என்ற வித்தியாச மில்லாமல் எல்லோரிடமும் அன்பாக நடந்து கொண்டார் டாக்டர் நாதன். ஏழைகள் கூப்பிட்டாலும் பணக்காரர்கள் கூப்பிட்டாலும் உடனே சென்றார். இந்தத் திடீர் மாறுதல் எதனால் என்று புரியாவிட்டாலும் விஜயாவின் மனம் நிம்மதி அடைந்தது. தன் கணவரின் நற்குணத்தைக் கண்டு அவள் பெருமை கொண்டாள்.

# கம்பர் தரும் காட்சி

டி.கே.சி

## 318. ஆயிரம் ஆயிரம் படைகள்!

அதிகாயனும் மற்றத் தம்பிகளும் எதிரிகளால் மாண்டார்கள் என்று ராவணன் சொன்ன மாத்திரத்தில் துயரமும் கோபமும் இந்திரஜித்துக்கு உண்டாய்விட்டன என்பதைப் பார்த்தோம்.

"எதிரிகளா கொன்றார்கள்?—நீதான் கொன்றாய்" என்றுகூடக் கடிந்து விட்டான் தந்தையைப் பார்த்து.

அடுத்த நிமிஷத்தில் ஒரு வீராவேசம் இந்திரஜித்தின் உள்ளத்தில் கொதித்து எழுந்தது. "இதோ போய் அந்த மனுஷன் லக்ஷ்மணனுடைய இரத்தத்தைச் சிந்திவிட்டுத் தான் மறு காரியம். சிந்தாமல் போனால் இந்திரனை ஜெயித்தவன் என்ற பெயர் எனக்கில்லை."

* * *

இத்தகைய வீர வார்த்தையை இந்திரஜித்து சொன்ன மாத்திரத்தில் ராவணனுக்குச் சந்தோஷமே உண்டாய் விட்டது.

"அப்பனே! அப்படிப் போய் என்னுடைய துன்பத்தை நீக்கிவிடு. உன்னால் ஆகாதது இவ்வுலகில் என்ன தான் இருக்கிறது?"

ஏகாய், இது
  செய்தெனை(து) இன்னலை
    நீக்கி(டு): எந் தைக்(கு)
ஆகா தன
  வும்உள வோ! எனக்(கு)
    ஆற்றலார் மேன்,
மாகால் வரி
  வெஞ்சிலை நீதான்
    வளைத்தபோ து
சேகா கும்என்(று)
  எண்ணிஇவ் இன்னலின்
    வாழ்தல்செய் தேன்.

[ஏகாய்: இந்திரஜித்துவே அப்படியே செல்லுவாயாக; இது செய்து எனது இன்னலை நீக்கிடு: நீ சொல்லுகிற வீரச் செயலைச் செய்து என் துன்பத்தை நீக்குவாயாக; எந்தைக்கு ஆகாதனவும் உளவோ: எனது அப்பனாகிய உனக்குச் செய்ய முடியாத காரியம் ஒன்று உண்டா; எனக்கு ஆற்றலார் மேல்: என்னைவிடச் சக்தி அதிகமாய் உள்ள பகைவர்கள் மேல்; மாகால் வரி வெஞ்சிலை: பெரிய தண்டோடும் பலத்த கட்டோடும் கூடிய வில்லை; நீதான் வளைத்தபோது: எதிரிகளைக் குறித்து வளைத்து விட்டால்; சேகு ஆகும் என்று எண்ணி: உண்மையான பலம் நம் கட்சிக்கு வந்துவிடும் என்று எண்ணியே; இன்னலின் வாழ்தல் செய்தேன்: இந்தத் துயரத்திலும் உயிரை வைத்துக் கொண்டிருந்தேன்.]

ராவணன் இந்தமாதிரி பேசிய மாத்திரத்தில் இந்திரஜித்துக்குத் தந்தை மேல் அன்பும் பரிவும் உண்டாய் விட்டது. ராவணனை வணங்குகிறான். வணங்கிவிட்டு யுத்த சன்னத்தன் ஆகிறான்.

என்றா னை
  வணங்கி,இ லங்(கு) எயில்
    வாளும்ஆர்த் திட்(டு),
ஒன்றா னும்
  அரு,உரு வாஉடல்க்
    காவலோ டும்,
பொன்தாழ் கணை
  யின்நெடும் புட்டில்
    புறத்துவிக் கி,
வன்தாள் வயி
  ரச்சிலை வாங்கினன்
    வானைவென் றான்.

[என்றானை வணங்கி: என்று பேசிய ராவணனை வணங்கிவிட்டு; இலங்கு எயில் வாளும் ஆர்த்திட்டு: பிரகாசமான சட்டையையும் வாளையும் அரையில் கட்டிக்கொண்டு; ஒன்றானும் அரு உருவா உடற் காவலோடும்: எந்த ஆயுதத்தினாலும் உடை படாததும் ஊடுருவப் படாததுமான உடலுக்கான கவசத்தை மாட்டிக்கொண்டு; பொன் தாழ் கணையின்: எஃகு முனை கொண்ட அம்புகள் நிறைந்த; நெடும் புட்டில் புறத்து விக்கி: பெரியதொரு அம்பறாத் தூணியை முதுகில் கட்டிக்கொண்டு; வன்தாள் வயிரச் சிலை வாங்கினன்: மிக்க பலங்கொண்ட, எக்காரணத்தாலும் முறிபடாத வில்லைக் கையில் எடுத்தான்; வானை வென்றான்: தேவேந்

நரனையோ தேவர்களேயோ எல்லாரையும் வென்றவன் என்று சொல்லக் கூடிய இந்திரஜித்து.]

* * *

ஆயுத சன்னத்தன் ஆகிவிட்டான் இந்திரஜித்து.

யுத்தத்துக்குப் புறப்படுகிறான். அவனுடைய படையாக எண் நிறைந்த தேர்கள் பக்கத்தில் நிறைந்து போகின்றன. அப்படியே எண் நிறைந்த யானைகள் பின்னால் வருகின்றன. யானைகளுக்குப் பின்னால் பெருந் திரளான குதிரைப்படை வருகிறது.

இந்தப் படைகள் பக்கத்திலும் பின்னுமாக வர, காலாட்படைகள் மகா சமுத்திரம் போல முன்னேறி நடக்கின்றன.

தேர்ஆ யிரம்
ஆயிர கோடிதன்
மாடுசெல் லப்,
போரா னை
புறத்தின்அ வற்றின்
இரட்டிபோ தத்
தாரார் புர—
விக்கடல் பின்செலத்,
தானைவீ ரப்
போரா ழி
முனம்செலச், சென்றனன்
போர்ச்சிஇல் லான்.

[தன் மாடு செல்ல: தன் பக்கமாக வர; போரானை புறத்தின் அவற்றின் இரட்டி போத: போர்க்கான கொம்பன்கள் தேர்களுக்குப் பின்னால் இரட்டிப்பாக வர; தாரார் புரவிக் கடல் பின் செல: கழுத்தில் மாலை அணிந்த குதிரைப் படை கடல் போல் யானைகளுக்குப் பின் வர; தானை வீரப் போராழி முனம் செல: வீரங்கொண்ட காலாட் படை மகா சமுத்திரம்போல் முகப்பில் நடந்துபோக; சென்றனன் போர்ச்சி இல்லான்: ஒரு தேரிலும் போரினின்—எந்தப் போரிலும் பெயர்ந்து பின்வாங்காத வீரனான இந்திரஜித்து.]

இந்திரஜித்து, ராம—ராவண யுத்தத்தில் ஒரு முக்கியமான பாத்திரம். அதற்கிணங்க அவனை ஆயுத சன்னத்தனாக்கி, மாபெரும் சேனை பலத்தோடு யுத்தத்துக்கு அனுப்புகிறார் கம்பர். சேனைகளின் பெருமை ஆயிரம் ஆயிரம் என்ற ஓசைகளினால் துலங்குகின்றன.




உதயபுரி அல்லது மேவார் ராஜ்யத்தை ஆட்சிபுரிந்த ராணா வம்சத்தினரின் வீர தீர பராக்கிரமங்களும் தியாகங்களும் இந்திய சரித்திரத்தை அலங்கரிக்கும் பொன் மயமான பக்கங்களில் நவரத்தினங்களால் இழைக்கப்படவேண்டியவை. ராணா வம்சத்தைச் சேர்ந்த ஆடவர்கள் மாத்திரமில்லை, மகா ராணிகளும் இளவரசிகளுங்கூட சுதேசத்துக்காகவும் சுதந்திரத்துக்காகவும் உயிர்த் தியாகம் செய்து சிரஞ்சீவிகளாகி யிருக்கிறார்கள்! சரித்திர வானில் என்றென்றும் மங்காத நக்ஷத்திரமாக விளங்கும் ஒரு சில நாரீமணிகளில் உதயபுரி இளவரசி கிருஷ்ணகுமாரி பாய் ஒருவர். பதினாறு வயதுகூட நிரம்பாத அந்தப் பெண்மணி புரிந்த அரிய தியாகம் உலகம் உள்ளளவும் ஒளி வீசிக்கொண்டிருக்கும். அதைப் பற்றிச் சரித்திரம் சித்திரிக்கும் உருக்கமான காட்சிகளைப் பாருங்கள்!

### காட்சி 1

[ஜெயபுரி அரண்மனை உத்யான வனத்தில் மன்னன் ஜகத் சிங் மது அருந்திக் கொண்டு உல்லாசமாக வீற்றிருக்கிறான். ஜோதிபுரி சமஸ்தான மந்திரி பதவியிலிருந்து விலகி ஜெயபுரி சமஸ்தானத்துக்கு வந்துள்ள புதிய மந்திரி சேவாசிங் பக்கத்தில் உள்ள பீடத்தில் உட்கார்ந்து கொண்டு மன்னனின் நிலையைக் கவனித்த வண்ணமாக இருக்கிறான். மன்னனுடன் சேவா சிங்கும் மதுபானம் செய்தாலும் மன்னனைப்போல் அவனது நிலையில் சிறிதும் தடுமாற்றம் இல்லை! சேவாசிங் சம்பந்தப்பட்ட மட்டில் மது தன் போதைச் சக்தியையே இழந்து விட்டதுபோல் தோன்றுகிறது!]

ஜகத் சிங்:—மந்திரி! நமது ராஜ்யத்தில் தங்களுக்கு எல்லாம் சௌகரியமாக இருக்கிறது அல்லவா? ஜோதிபுரியைக் காட்டிலும் இந்தச் சமஸ்தானத்தில் நீங்கள் அதிக சந்தோஷத்துடன் இருக்கிறீர்கள் என்றே நம்புகிறேன்.

சேவா சிங்:—மகாராஜ்! அதில் சந்தேகமே இல்லை. ஜோதிபுரியைக் காட்டி

லும் தங்கள் ராஜ்யத்தில் என் வாழ்க்கை எவ்வளவோ ஆனந்தமாக இருக்கிறது!

ஜகத் சிங் (பெருமிதத்துடன்):—ஏதாவது குறை இருந்தால் சொல்லுங்கள். உடனே பரிகாரம் செய்து விடலாம்.

சேவா சிங் :—ஒன்றுமில்லை...என்னைப் பற்றிய வரையில் ஒரு குறையும் இல்லை... ஆனால்...(தயங்குகிறான்.)

ஜகத் சிங் (பதட்டமாக):— ஆனால் என்ன? உடனே சொல்லுங்கள்!

சேவா சிங் :—ஜோதிபுரியை அலங்கரிக்கப் போகும் ராஜஸ்தான் ரோஜாவுக்கு ஈடு இந்த ராஜ்யத்தில் யாரும் இல்லையே என்பதுதான் குறை.

ஜகத் சிங் :—இதுதானா பிரமாதம்? ராஜஸ்தான் ரோஜாச் செடிகளில் நூறு செடிகளுக்குமேல் பிடுங்கிக் கொண்டு வந்து இங்கு நட்டுவிட்டால் போகிறது.

(மன்னன் ஜகத் சிங்கின் அவசரத்தையும் அறியாமையையும் கண்டு சேவா சிங் உள்ளூறச் சிரித்துக் கொள்கிறான்.)

சேவா சிங் :—மகாராஜ்! அது அவ்வளவு சுலபமான காரியம் அல்ல. நான் சொல்வது சாதாரண ரோஜா அல்ல. இந்த உலகத்திலேயே அந்த ரோஜாவுக்கு ஈடு அதுவே தான். இணையற்ற அழகும் மணமும் வாய்க்கப் பெற்ற ரோஜா! அது மாத்திரமல்ல, குணமும் வாய்க்கப்பெற்ற ரோஜா! அழகு, மணம், குணம் மாத்திரமல்ல, ஜீவனுடன் கூடிய ரோஜா!

ஜகத் சிங் (ஆச்சரியத்துடன்):— அப்படியா? எனக்குத் தெரியாமல் அப்படிப்பட்ட ஒரு அபூர்வ ஜாதி ரோஜா இந்த உலகத்தில் இருக்கிறதா?

சேவா சிங் :— ஆமாம். அதைப் பற்றி இதுவரையில் தங்களுக்குத் தெரியாதது ஆச்சரியமாக இருக்கிறது......ராணா பீம சிம்மனின் செல்வக் குமாரி, உதயபுரி இளவரசியான கிருஷ்ண குமாரி பாயைத் தான் குறிப்பிடுகிறேன். பரதகண்டம் எங்கும் 'ராஜஸ்தான் ரோஜா' என்று பிரசித்தி பெற்ற உதயபுரி இளவரசியின் ஒப்பற்ற அழகைப் பற்றித் தாங்கள் கேள்விப் பட்டதில்லையா?

ஜகத் சிங் :—ஏதோ கேள்விப்பட்டிருக்கிறேன்...எனினும் நமது அந்தப்புரத்தில் இருக்கும் அழகிகளைக் காட்டிலுமா அவள் மேலானவள்?

சேவா சிங் :—உண்மையைச் சொன்னால் தாங்கள் கோபித்துக் கொள்ள மாட்டீர்களே?

ஜகத் சிங்:—சொல்லுங்கள்!

சேவா சிங் :—ஜெயபுரி அந்தப்புரத்தில் உள்ள பெண்கள் உதயபுரி இளவரசி 'ராஜஸ்தான் ரோஜா'வுக்குச் செடிகளாக இருப்பதற்குக் கூடத் தகுதியற்றவர்கள்.



ஜகத் ஸிங் (கண்கள் சிவக்க):—சேவா ஸிங்! யாருடன் பேசுகிறீர்கள் என்பது நினைவில் இருக்கட்டும். நிதானித்துப் பேசுங்கள்!

சேவா சிங் (தலை குனிந்தவண்ணம்):— மன்னிக்க வேண்டும். தங்களிடம் ஒளிக்காமல் உண்மையைச் சொன்னேன். அவ்வளவுதான். தேவலோகத்து ஸ்திரீகளான ரம்பை, ஊர்வசி, திலோத்தமை கூட 'ராஜஸ்தான் ரோஜா'வுக்கு ஈடாக மாட்டார்கள். அவளை விவாகம் செய்து கொள்வதற்காக உதயபுரி ராணாவின் காலடியில் எத்தனை மன்னாதி மன்னர்கள் வந்து விழுந்து கெஞ்சியிருக்கிறார்கள், தெரியுமா? இன்று அந்த ராணாவின் கர்வம் உச்ச நிலையை அடைந்திருப்பதற்கு அதுதான் காரணம். சகல சௌபாக்கியங்களுடனும் விளங்கும் தங்களுக்கு அந்த ஒரு குறை இருக்கக் கூடாது என்பதற்காகவே ராஜ சந்நிதானத்தில் மனம் விட்டுப் பேசினேன். மீண்டும் உங்கள் மன்னிப்பைக் கோருகிறேன்.

ஜகத் ஸிங்:—சரி, சரி! 'ராஜஸ்தான் ரோஜா'வை நான் அடைய வேண்டும். அதற்காக எந்த ராஜ்யத்துடன் போரிட நேர்ந்தாலும் சரி! எந்த ராஜ்யம் சீரழிந்தாலும் சரி! எத்தனை பேர் பலியானாலும் சரி! உடனே அதற்கான ஏற்பாடுகளைச் செய்ய வேண்டியது உங்களுடைய கடமை.



## காட்சி 2

[உதயபுரி அரண்மனையில் உள்ள மந்திராலோசனை அறையில் உதயபுரி மன்னன் ராணா பீமஸிம்மன் சோகமே உருவெடுத்தாற்போல வீற்றிருக்கிறான். அருகில் அவனது சகோதரனான யௌவனதாஸ் கண்கலங்க உட்கார்ந்து கொண்டிருக்கிறான்.]

ராணா பீமஸிம்மன்:— ராஜஸ்தானின் தலைவிதி இப்படியா இருக்க வேண்டும்? இலங்கை அழிவதற்குச் சீதையின் ஜனனம் காரணமாக அமைந்ததுபோல், ராஜஸ்தான் அழிவதற்கு என் செல்வப் புதல்வி கிருஷ்ண குமாரியின் ஜனனமா காரணமாக இநக்க வேண்டும்? ஆஹா! இந்த உலகத்திலே ஈடு இணையற்ற சௌந்தர்யத்தை அவளுக்கு அளித்த பிரம்மன், அந்த அழகின் ஆயிரத்தில் ஒரு பங்காவது அதிர்ஷ்டத்தைக் கொடுத்திருக்கக் கூடாதா? (பெருமூச்சு விடுகிறான்.)

யௌவனதாஸ்:—பதினாறு வயது கூட நிரம்பாத குழந்தையை கொன்று கொள்வதால் என்ன பலன்!

ராணா:—குழந்தையை கொன்று கொள்ளவில்லை. அவளுடைய அதிர்ஷ்டத்தைத் தான் கொன்று கொல்கிறேன். முதலில் ஜோதிபுரி ராஜா பீம ஸிம்மனுக்குக் கிருஷ்ண குமாரியை விவாகம் செய்து கொடுக்க நிச்சயித்தோம். பீமஸிம்மன் மாண்டான். பிறகு ஜோதிபுரி பட்டத்துக்கு வந்த மான ஸிம்மனுக்கு அவளை விவாகம் செய்து கொடுக்க உத்தேசித்தோம். அதற்கு முட்டுக் கட்டையாக கோரமான போர் மூண்டுவிட்டது. அதுவும் கிருஷ்ண குமாரி காரணமாக மூண்ட இந்தப் போரில் ஜோதிபுரியும் உதயபுரியும் சின்னாபின்னமாகி விட்டன.

யௌவனதாஸ்:—அண்ணா! பழங் கதைகளையெல்லாம் இப்போது சொல்லிப் பிரலாபிப்பதால் என்ன லாபம்? மீதியுள்ள கொஞ்ச சைன்யத்தை வைத்துக் கொண்டு இறுதியாகப் போரிட்டுப் பார்த்துவிடுவோம்.

ராணு :—நன்ருகச் சொன்னுய்! உண்மையான ரஜபுத்திர வீரனுக்கு அழகு அதுதான். இருந்தாலும் தந்திரம் என்பது யுத்தத்தின் ஒரு முக்கிய அம்சம். எனவே அதையும் கையாண்டு பார்த்து விடவேண்டும் அல்லவா?

யௌவனதாஸ் :—ஜெயபுரி மன்னனுக்குப் பட்டாணியர், மொகலாயர்கள் முதலியோரின் அபரிமிதமான உதவி கிடைத்து வரும்வரையில் நம்முடைய படைகள் வெற்றியடைவது எளிதான காரியமாகத் தோன்றவில்லை.

ராணு :—பகைவர்களைக் காட்டிலும் அண்டிக் கெடுக்கும் துரோகிகளால்தான் இப்போது ராஜஸ்தான் பரிதவிக்க நேர்ந்திருக்கிறது. ஜோதிபுரியில் மந்திரியாக இருந்து விலகிய பாவி சேவாசிங் ஜெயபுரி மன்னனுக்குத் துர்மந்திரியாக இருந்து வருகிருன். அவன் மொகலாயர்களின் ஒற்றன் என்பதை ஜெயபுரி மன்னன் அறியான். சேவாசிங்கும் அவனது ஆட்களும் கறையானைப் போல் உள்ளே இருந்து கொண்டே ராஜ்யத்தை அரித்து வருகின்றனர். எனவே பகைவர்களை ஒழிக்க முற்படுமுன் இவர்களை ஒழிக்க வேண்டும். இந்தச் சதிகாரத் துரோகிகளை ஒழித்தாலன்றிப் பகைவர்களை முறியடிப்பது சாத்தியமல்ல.

யௌவனதாஸ் :—யாருக்கும் பயனில்லாத, எல்லோருக்கும் துன்பத்தையும் நாசத்தையும் விளைவித்து வரும் இந்தப் போரை நிறுத்தும் விஷயமாகத் தாங்கள் கூறிய சமாதான யோசனைக்குப் பகைவர்களிடமிருந்து ஏதாவது பதில் வந்ததா?

ராணு :—போரை நிறுத்த இப்போது அவர்கள் ஒரு நிபந்தனை விதித்திருக்கிருர்கள். அதை நிறைவேற்றினுல் போர் நாளையே நின்றுவிடும்.

யௌவனதாஸ் (தயக்கத்துடன்) :—அவர்களின் நிபந்தனை என்னவோ?

ராணு (தழு தழுத்த குரலில்) :—இந்தக் கொடிய போருக்கு மூலகாரணமான கிருஷ்ண குமாரி இந்த உலகத்தில் இருக்கக் கூடாது என்பதுதான் அவர்களுடைய நிபந்தனை!

யௌவனதாஸ் (திடுக்கிட்டு) :—அயோக்கியர்கள்! ராஜபுதனம் முழுதுமே அழிவதாயினும், கிருஷ்ண குமாரியின் ஒரு விரலுக்குக் கூட ஆபத்து ஏற்படுவதைச் சகிக்கமாட்டேன்.

ராணு :—தம்பி! பதட்டப் படாதே. ராஜஸ்தானம் முழுதும் அழிந்து பகைவர்களின் ஆட்சி அமையலாம் என்ற நிலைமை இப்போது ஏற்பட்டிருப்பதை நீ ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். அழிவிலிருந்தும் அன்னியர் ஆதிக்கத்திலிருந்தும் ஒரு சாம்ராஜ்யத்தைக் காப்பாற்றுவதற்காக ஓர் உயிரைப் பலி கொடுக்கத் தயங்கலாமா?

யௌவனதாஸ் :—அண்ணு! கிருஷ்ண குமாரி தங்களுடைய செல்வப் புதல்வி 'ராஜஸ்தான் ரோஜா,' நமது ராஜ்ய லக்ஷ்மி என்பதைத் தாங்கள் மறந்து விட்டீர்களா? ராஜ்யலக்ஷ்மி போனபின் ராஜஸ்தானமே, இந்த உலகமே இருந்தாலென்ன? அழிந்தாலென்ன?

ராணு :—அப்பா, பதருதே. கிருஷ்ண குமாரி நமது குடும்பத்தின் அரிய பொக்கிஷம் என்பதை மறந்துவிடு. தெய்விக வனப்பு வாய்ந்த அவளுக்கு இந்தப் பாழும் பூவுலகிலே யாரும் கணவனுக இருக்கக் கூடாது. ஏன், அவளே இந்தப் பூமியில் இருக்கக் கூடாது என்பதுதான் கடவுளின் கட்டளை என்று தோன்றுகிறது!

யௌவனதாஸ் :—அண்ணு, தாங்கள் வார்த்தையை வளர்த்த வேண்டாம். இந்த வாள் என் கையில் இருக்கும் வரையில் கிருஷ்ண குமாரிக்கு அற்ப ஆபத்தும் ஏற்பட நான் பார்த்துக் கொண்டிருக்க மாட்டேன். இது சத்தியம்! அவள் அருகில் செல்வோன் யாராயினும், அவளைத் தொடுவதற்கு முன் அவனுடைய தலை மண்ணில் உருளுவது நிச்சயம்!

ராணு (கோபத்துடன்) :—உன் தர்மநியாயத்தை உன்னிடமே வைத்துக்கொள். இது யுத்தகாலம். ராஜ்யமும் மக்களும் இருப்பதா இறப்பதா என்ற பிரச்னை எழுந்துள்ள சமயம். கிருஷ்ண குமாரியை வேறு யாருமே தொடப்போவதில்லை. நீயும் உன்னுடைய வாளுமே பகைவர்களின் சமாதான நிபந்தனையை நிறைவேற்ற வேண்டும்.

யௌவனதாஸ் :—ஐயோ, அண்ணு! என்ன அநீதி! என்ன அக்கிரமம்! இது என்ன பயங்கரமான கட்டளை! என்னுல் முடியவே முடியாது. அதற்காகத் தாங்கள் என்ன தண்டனை விதித்தாலும் ஏற்றுக் கொள்ளத் தயாராயிருக்கிறேன். (தன் வாளைத் தரையில் வீசி எறிகிருன்.)

ராணு (தன் வாளை உருவி):—இந்த வாளைப் பிடி. நீ என்னிடம் உள்ள அதிகாரி. ராஜஸ்தான் மீது ஆணை! பரம்பரை வீரர்களான ராணு வம்சத்தினர் மீது ஆணை! உன் மன்னனின் கட்டளையை உடனே நிறைவேற்று, போ!

## காட்சி 3

[உதயபுரி அந்தப்புரத்தைச் சேர்ந்த அறையில் இளவரசி கிருஷ்ண குமாரி சப்ரமஞ்சத்தில் சோர்வுற்றுப் படுத்துக் கொண்டிருக்கிருள். அவளுடைய தோழிகள் கண்ணீரும் கம்பலையுமாகப் பக்

கத்தில் நின்று கொண்டிருக்கிறார்கள். உருவிய வாளுடன் கதவை மெதுவாகத் திறந்து கொண்டு வந்த யௌவனதாஸ் கிருஷ்ண குமாரியைப் பார்த்ததும் மனம் நைந்து அன்பு மேலிட்டு வாளை உறைக்குள் எறிகிறான். தன்னுடைய மூத்த சகோதரனின் புதல்வியான கிருஷ்ண குமாரியை வந்து அன்புடன் தழுவிக் கொள்கிறான். அதைக் கண்ட தோழிகள் துக்கம் தாங்கமாட்டாமல் விம்முகின்றனர்.]

யௌவனதாஸ்:—மன்னனின் கட்டளையாயினும் சரி, மகாராஜாதி ராஜனின் கட்டளையாயினும் சரி, கடவுளின் கட்டளையாயினும் சரி, அதை நான் நிறைவேற்றப் போவதில்லை! இந்தக் கரங்களால் உனக்கு அணுவளவும் கஷ்டம் நேராது. உனக்குத் தீங்கு விளைப்போரின் சிரங்களைத்தான் இந்தக் கரங்கள் முதலில் வீழ்த்தும்.

கிருஷ்ண குமாரி :—உங்களுக்கும் என் தந்தைக்கும் நடந்த விவாதத்தை நான் திரை மறைவிலிருந்து கேட்டுக் கொண்டிருந்தேன். ஆகையால் என் தந்தைக்கோ உங்களுக்கோ நான் சிரமத்தைக் கொடுக்க விரும்பவில்லை. உங்களுடைய தர்ம சங்கடம் தீர்ந்து விட்டது. தந்தையின் கட்டளையை, ராணாவின் கட்டளையை நானே என் கையால் நிறைவேற்றி விட்டேன்.

யௌவனதாஸ் (திக்பிரமை கொண்டு கண்ணீர் பெருக):— ஐயோ, கண்மணி! நீ என்ன சொல்கிறாய்?

கிருஷ்ண குமாரி :—தந்தையின் கட்டளையை நானே நிறைவேற்றி விட்டேன். உங்களுடைய வாளும் ராணாவின் வாளும் நிறைவேற்றத் தயங்கிய காரியத்தை இதோ இந்தக் கிண்ணத்தில் இருந்த விஷம் நிறைவேற்றி விட்டது. (ஆவேசத்துடன் எழுந்து) தந்தையே! ஏன் கண்ணீர் விடுகிறீர்கள்? வீரர்களும் வீராங்கனைகளும் தோன்றிய நமது வம்சத்தில் வற்றி விடவில்லை. நமது முன்னோர்களில் எத்தனையோ பேர் தேசத்துக்காகப் போரிட்டு வீர ஸ்வர்க்கம் அடையவில்லையா? அதுபோல் நானும் வீர ஸ்வர்க்கம் அடைவதைக் கண்டு ஏன் கண்ணீர்விட வேண்டும்? மரணத்தைக் கண்டு நமது வம்சத்தினர் என்றாவது அஞ்சியது உண்டா? நம் நாட்டையும் மானத்தையும் காப்பாற்றிக் கொள்வதற்காக ராஜபுத்திர நாரீமணிகளில் எத்தனையோ பேர் உயிர்த் தியாகம் செய்யவில்லையா? அக்னிப் பிரவேசம் செய்து புனித வதிகளாகவில்லையா? அவர்களுடைய அடிச்சுவடுகளைப் பின்பற்றும் அரிய சந்தர்ப்பம் இப்போது கிடைத்ததைக் கைவிடலாமா? நமது ராஜ்யத்தின் க்ஷேமத்துக்காக நான் என்னையே பரம சந்தோஷத்துடன் பலி கொடுக்கிறேன். நமது வீரர்கள் வெற்றி பெறுவார்களாக! நமது ராஜ்யம் மறுபடியும் உயிர்பெற்று எழுமாக!

(கிருஷ்ண குமாரி துவண்டு மஞ்சத்தின் மீது சாய்கிறாள். தோழிகள் அவளை அணைத்துக் கொள்கின்றனர். தம்பி யௌவனதாஸும் மற்றவர்களும் அலறுவதைக் கேட்டு ராணா பீமசிம்மன் ஓடி வருகிறான். கிருஷ்ண குமாரியின் சடலத்தை மடி மீது வைத்துக் கொண்டு உள்ளம் வெடித்து விடும்போல் கதறுகிறான்.)

## காட்சி 4

[ஜெயபுரி அரண்மனையின் ஆஸ்தான மண்டபத்தில் மன்னன் ஜகத்சிங்கும் முக்கிய அதிகாரிகளும் சோகத்துடன் அமர்ந்திருக்கிறார்கள். ஜகத்சிங்கின் பக்கத்தில் உதயபுரி மன்னன் ராணா பீமசிங் கண்ணீர் பெருக வீற்றிருக்கிறான். அப்போது மண்டபத்துக்கு வெளியிலிருந்து ஏதோ கோஷம் கேட்கிறது. 'ராஜஸ்தான் ரோஜா வீழ்ந்தது' 'ஜகத்சிங் வாழ்க' என்று கோஷித்துக் கொண்டு சேவாசிங் மண்டபத்துக்குள் நுழைகிறான். 'வெற்றி' 'வெற்றி' என்று கூறிக்கொண்டு ஜகத் சிங்கிடம் சென்ற சேவாசிங் பக்கத்தில் உதயபுரி ராணா வீற்றிருப்பதைக் கண்டு திடுக்கிட்டு நிற்கிறான்.]

ஜகத்சிங் :—(வாளை உருவிக் கொண்டு கோபாவேசத்துடன்) துரோகி! பகைவர்களிடம் பணம் வாங்கிக் கொண்டு ராஜ்யத்தைச் சின்னாபின்னமாக்கிய பதரே! வெற்றி யாருக்கு? உன் வெறிக்கும் துரோகத்துக்கும் நய வஞ்சகத்துக்கும் வெற்றி! அண்டிக் கெடுத்த சண்டாளப் பிறவியே! உதயபுரி ராணாவின் செல்வத்தைக் கொள்ளை கொண்ட பாவி! அவரது அருமைப் புதல்வியைக் கொலை செய்வதற்காகப் பகைவர்களுடன் சதி செய்து திட்டத்தை விதித்தாய் அல்லவா? ஜோதிபுரி ராஜ்யத்தின் மீது வஞ்சம் தீர்த்தாய் அல்லவா? உன் துரோகத்தை உதயபுரி ராணா கைச்சாத்துகளுடன் நிரூபித்து விட்டார். யாரும் மறுக்க முடியாத அந்த தஸ்தாவேஜுகளை ஆதாரமாகக் கொண்டு இச் சபையினர் உனக்கு மரண தண்டனை விதித்திருக்கிறார்கள். நான் செய்த பாவங்களுக்கும் தவறுகளுக்கும் பிராயச்சித்தமாக அந்தத் தண்டனையை என் கையினால் நானே சிறிதும் தாமதிக்காமல் நிறைவேற்றப் போகிறேன். உன்னால் தன் செல்வப் புதல்வியை இழந்த ராணாவின் காலடிகளில் உன் தலை உருளட்டும். ராஜஸ்தானின் அமைதிக்காக நான் கொடுக்கும் இறுதிப் பலி சேவாசிங்தான்!

(திரை)

# அவன் அமரன்

## விஜயம்

அன்று விஜயபுரம் அரண்மனைச் சபா மண்டபத்தில் ஒரே குதூகலமாயிருந்தது. காரணம் வெகு நாட்களுக்குப் பிறகு ராஜ சபை கூடியிருந்ததுதான்.

அரசன் வந்து சபாமண்டபத்தில் நடு நாயகமாக விளங்கிய சிம்மாசனத்தில் அமர்ந்ததும் சபையில் ஒரே அமைதி குடி கொண்டது. முக்கியமான அலுவல்களையெல்லாம் மகாராஜா பிரதம மந்திரியின் உதவியுடன் மிகவும் விரைவாகக் கவனித்தார்.

சற்று நேரத்துக்கெல்லாம் சேவகன் ஒருவன் வந்து மகாராஜாவுக்கு எதிரில் நின்று வணங்கி, கைகட்டி வாய் புதைத்து நின்றான்.

"சேவகா, என்ன சமாசாரம்!" என்று மகாராஜா கம்பீரமான குரலில் கேட்டார்.

"மகாராஜா, சபா மண்டபத்துக்கு ஒரு முனிவர் வந்திருக்கிறார். தங்களைக் காண வேண்டுமாம்!" என்றான் சேவகன்.

"முனிவரா! அவரை உடனே இங்கே அழைத்துக் கொண்டு வா!" என்று மகாராஜா கூறியதும் சேவகன் விரைந்தோடி—அந்த முனிவரை அழைத்து வந்தான்.

முனிவரைக் கண்டதும் மகாராஜா சிம்மாசனத்திலிருந்து எழுந்து, "முனிபுங்கவரே, வர வேண்டும், வர வேண்டும்! அந்த ஆசனத்தில் அமருங்கள்!" என்று உபசார மொழிகள் பல கூறி அவரை வரவேற்றார்.

முனிவர் ஆசனத்தில் அமர்ந்து "அரசே, நான் இமய மலையிலிருந்து வருகிறேன். அங்கே ஒரு அபூர்வ மூலிகை கிடைத்தது. அதை அருந்தினால் சாகாவரம் பெற்று விடலாம். தவ வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கும் எனக்கு அந்த மூலிகையினால் என்ன பிரயோஜனம்! தேசத்தை ஆளும் மன்னவன் அதை அருந்தினால், அவன் மரணத்தை வென்று நாட்டுக்கும் நாட்டு மக்களுக்கும் எவ்வளவோ நன்மைகளைச் செய்யலாம். ஆதலால் அந்த மூலிகையை நீங்கள் பெற்றுக் கொள்ளுங்கள்!" என்று கூறித் தம் கமண்டலத்திலிருந்து அந்த மூலிகையை எடுத்து மகாராஜாவிடம் கொடுத்தார். அவர் அதை மிகவும் மரியாதையோடு வாங்கிக் கொண்டார்.

மகாராஜாவுக்குச் சந்தோஷம் தாங்கவில்லை. மரணத்தை வெல்லும் மருந்து இவ்வளவு சுலபமாகத் தம்மைத் தேடி வந்ததில் அவருக்கு உண்டான சந்தோஷம் இவ்வளவு அவ்வளவு அல்ல. அதைக் கையில் வைத்துக் கொண்டு அப்படியே மெய்மறந்து நின்று விட்டார்.

கொஞ்ச நேரத்துக்குப் பிறகுதான் மகாராஜாவுக்கு முனிவர் நினைவு வந்தது. "அடடா! இந்த அபூர்வ மூலிகையை நமக்குக் கொண்டு வந்து கொடுத்த முனிவருக்குத் தகுந்த மரியாதை செய்ய வேண்டாமா!" என்று நினைத்து முனிவர் இருந்த பக்கம் திரும்பிப் பார்த்தார். என்ன ஆச்சரியம்! முனிவர் அந்த இடத்திலிருந்து மறைந்து விட்டார்.

மறுநாள் காலையில் மகாராஜா ஸ்நானம் செய்து விட்டு அந்த மூலிகையை ஒரு பெரிய பாத்திரத்தில் போட்டு அதில் ஜலத்தை விட்டு அந்த ஜலத்தைக் கொஞ்சம் சாப்பிட்டார். பிறகு மந்திரி, சேனாபதி, ராணி யாவரும் அந்த ஜலத்தை மிகவும் பக்தி சிரத்தையுடன் சாப்பிட்டார்கள். சேனை வீரர்களுக்கெல்லாம் கொடுக்கப் பட்டது. அந்த மூலிகையின் அருளால் அரண்மனையைச் சேர்ந்த யாவருக்கும் சாகாவரம் கிட்டி விட்டது. அரசாங்கத்தைச் சேர்ந்த குதிரைகள் அமரத்வம் பெற்றன; மத்தகஜங்கள் மரணத்தைக் கடந்தன; அரண்மனை நாய்கள் அமரத்வம் அடைந்தன; அந்தப்புரத்துப் பூனைகள் அமரத்வம் அடைந்தன.

அந்த மூலிகையின் மகிமையினால் அவர்களுக்கு மரணம் மட்டும் இல்லை என்பதில்லை; பிணி இல்லை; மூப்பு இல்லை. ஆகவே அவர்கள் யாருக்கும் ஊக்கம் இல்லை; உற்சாகம் இல்லை; முயற்சி இல்லை. எதிலும் அவர்களுக்கு ஆர்வமும் இல்லை. எப்பொழுது பார்த்தாலும் மகாராஜா, மகாராணி, மந்திரி முதலியவர்களெல்லாம் படுத்த படுக்கையாகக் கிடந்தனர்.

மகாராஜாவுக்கு மரணத்தை வென்றும் ஒரே ஒரு கவலை மட்டும் மனதை அரித்துக் கொண்டிருந்தது. அது அவர் பிள்ளை சத்ருமல்லன் சாகாவரம் பெற முடியாமற் போய் விட்டதே என்பதுதான். ஏனென்றால் அந்த மூலிகை தீர்ந்து போய் விட்டது. கடல் கடந்த பிரதேசங்களில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்த அவன் வருகிற வரையில் அதை வைத்திருக்கவும் முடியவில்லை.

பசியும், சோர்வும், உணர்ச்சியும் இல்லாமற் போய் விடவே சேனை வீரர்களுக்கெல்லாம் தங்கள் கடமையை ஆற்ற வேண்டிய அவசியமே அவர்களுக்குத் தோன்றவில்லை. தாங்கள் எதற்காக ராணுவக் கட்டுப்பாடுகளுக்கு உட்பட்டு நடக்க வேண்டும் என்று நினைக்கத் தலைப்பட்டு விட்டனர். ஒவ்வொருவராக மனம் போன போக்கில் சென்று விட்டனர். சேனாபதியும் அமரனாகிவிட்ட படியால் அவனுக்கும் அவர்கள் மீது கடுமையான ஒழுங்கு நடவடிக்கை எடுத்துச் சட்டப்படி தண்டனை விதிக்கத் தோன்றவில்லை.

சில மாதங்கள் சென்றன. விஜயபுரத்திலிருந்து சேனை வீரர்கள் ஓடிவிட்ட செய்தி ஒரு தூர தேசத்து அரசனுக்கு எட்டியது. அவன் பெரும் படையுடன் வந்து விஜயபுரத்தை முற்றுகையிட்டான். அவன் சண்டை செய்ய வேண்டிய அவசியமே நேரவில்லை.

விரைவில் விஜயபுரம் பகையரசனின் வசம் ஆகிவிட்டது. அரண்மனையையும் கைப்பற்றி அவன் சிம்மாசனத்தையும் கைப்பற்றி விட்டான். என்ன செய்தும் உயிரையும் விடாமல்

சண்டையும் செய்யாமல் இருக்கும் சோம்பேறி மகாராஜாவையும் மந்திரியையும் பார்த்த அந்த அரசன், அரண்மனையை மாத்திரம் அவர்களிடம் விட்டு விட்டு, ராஜ்ய அதிகாரத்தை நிர்வகித்து நடத்தத் தன் தம்பியை அரசனாக நியமித்து விட்டு ஊர் போய்ச் சேர்ந்தான்.

விஜயபுரம் மகாராஜா தம் நாட்டை இழந்ததைப் பற்றித் துளிக்கூட வருத்தப்படவில்லை. அவர் பாட்டுக்குப் படுத்துப் புரண்டு கொண்டிருந்தார். பசி இல்லாததனால் அவருக்கு எதுவுமே அவசியம் இல்லாமற் போய்விட்டது.

சில வருஷங்கள் சென்றன. விஜயபுரத்து மகாராஜாவின் வீரப் புதல்வன் சத்துரு மல்லன் வெகு நாட்களுக்குப் பிறகு தன்னுடைய தாய்நாட்டுக்குத் திரும்பினான்.

அவன் இப்போது வேறு நாடுகளை யெல்லாம் ஜயங் கொண்டு யானை, குதிரை, சேனை வீரர்கள் முதலிய பரிவாரங்களுடன் விஜயபுரத்துக்கு வந்தான். நாட்டு எல்லையிலேயே நாடு பகைவர் வசமாகிவிட்டது என்கிற செய்தி அவனுக்குத் தெரிய வந்தது. சத்துரு மல்லனின் மனங் கொதித்தது. பரிவாரங்களை யெல்லாம் காட்டில் நிறுத்தி விட்டு, தான் மட்டும் மாறு வேஷம் பூண்டு நகருக்குள் நுழைந்தான்.

நகரத்தின் நிலையைப் பார்த்ததும் அவன் மனம் கலங்கியது. விஜயபுரத்துப் பிரதான அரசாங்க மாளிகைகளில் எல்லாம் பகைவர் காவல் அமைத்திருந்தனர். நகரத்து ஜனங்க ளெல்லாம் சுதந்திர உணர்ச்சியே யில்லாமல் மரக் கட்டையைப் போல் இருந்தனர்.

சத்துருமல்லன் அரண்மனையில் நுழைந்தான். அங்கு ஒரே நிச்சப்தம் நிலவியது. மகாராஜா, மகாராணி, மந்திரி, சேனாபதி முதலிய யாவரும் உணர்ச்சியே இல்லாமல் இருந்தனர்.

"அம்மா!" என்று அலறிக் கொண்டு போய் மகாராணியைத் தழுவிக் கொண்டான் சத்துரு மல்லன்.

மகனைக் கண்ட தாய், "குழந்தாய், சத்துரு மல்லா! இவ்வளவு தாமதமாக வந்தாயே!" என்று கதறிக் 'குபுகுபு' வென்று கண்ணீர் விட்டாள்.

"அம்மா, கவலைப் படாதே! என் உயிரைக் கொடுத்தாவது மீண்டும் சுதந்திரத்தைப் பெறப் பாடுபடுவேன்!" என்றான் சத்துருமல்லன். அப்பொழுது சிம்மாசனத்தில் அமர்ந்து 'ஹுக்கா' பிடித்துக் கொண்டிருந்த மகாராஜாவைப் பார்த்தான். அவர் எதிரே மந்திரி நின்று கொண்டிருந்தார்.

"அப்பா!" என்று அவரிடம் ஓடினான்.

"நாங்களெல்லாம் அமரராகி விட்டோம், நீ தாமதித்து வந்தாயே! மூலிகை தீர்ந்து போய்விட்டதே!" என்றார் மகாராஜா.

"மூலிகையா! அமரத்வமா! என்ன அப்பா சொல்லுகிறீர்கள்!" என்று சத்துருமல்லன் ஒன்றும் விளங்காமல் கேட்டான்.

"ஒரு முனிவரின் அருளால் மூலிகை கிடைத்தது. அதை அருந்திச் சாகா வரம் பெற்று விட்டோம். அந்த முட்டாள் பகையரசன் எங்களை யெல்லாம் கொன்றுவிடப் பார்த்தான். ஆனால் ஒன்றும் பயன்படவில்லை. எங்களை அப்படியே விட்டு விட்டு ராஜ்யத்தை மட்டும் அபகரித்துக் கொண்டு விட்டான். முதலில் எங்களை யெல்லாம் சிறையில் தள்ளினான். எங்களுக்குத்தான் பசி, பிணி, தூக்கம் எதுவும் கிடையாதே! கடைசியில் வேறு வழியில்லாமல் அரண்மனையிலேயே எங்களை விட்டு விட்



டான்!" என்று கூறி மகாராஜா 'கக்கட கக்கட' என்று சிரித்தார்.

"உங்களுக்கு வெட்கமாயில்லையா? அமரர்களாயிருந்தும் சத்துருக்களிடம் தோல்வியடைந்தீர்களே! அப்பா, எழுந்திருங்கள்! இப்பொழுதும் ஒன்றும் கெட்டு விடவில்லை. நீங்கள் என் சொல்படி நடப்பதாயிருந்தால் நான் நமது தேசத்தைச் சுதந்திர முள்ளதாக்கி விடுகிறேன்!" என்றான் சத்துருமல்லன்.

"ஹஹ், ஹஹ், ஹா" என்று மகாராஜா கேலியாகச் சிரித்தார்.

"சத்துருமல்லா, அமரர்களுக்குச் சுதந்திரம் என்னத்துக்கு! நீ அமிர்தம் பருகி அமரத்வம் பெறாததனால் இப்படிப் பேசுகிறாய்!" என்று மகாராஜா சொன்னார்.

"அப்பா, நான் தேச சுதந்திரத்துக்காகப் போர் புரிவேன். வெற்றி கிட்டாவிட்டால் போர்க்களத்தில் உயிரை விட்டு என்றும் அமரனாக விளங்குவேன்!"

"போருக்குப் பெரிய சேனை வேண்டுமே!" என்றார் மகாராஜா.

"நான் தயார் செய்து கொண்டு வருகிறேன், அப்பா!" என்று வீரத்துடன் சொல்லி விட்டுத் தந்தையை வணங்கி விடை பெற்றுக் கொண்டான் சத்துருமல்லன்.

சில நாட்களுக்குப் பிறகு விஜயபுரத்தின்மேல் பெரிய சேனா சமுத்திரத்துடன் சத்துரு மல்லன் போர் தொடுத்தான். விஜய புரத்து மக்கள் தங்கள் தேசத்து இளவரசனைக் கண்டதும் ஒரேயடியாக அவன் பக்கம் சேர்ந்து கொண்டனர். அவ்வளவுதான். சண்டமாருதவேகத்தில் சண்டை நடந்தது. பகையரசனும் அவனைச் சேர்ந்தவர்களும் தோல்வியடைந்து சரணடைந்தனர். வெற்றிச் சங்கங்கள் முழங்கின. அரண்மனையில் விஜயபுரத்துக் கொடி வானளாவச் சுதந்திரத்துடன் பறந்தது.

குட்டிக் கதை



## குருவியும் குஞ்சும்

ஒரு சமயம் நான் வேட்டைக்குப் போய்விட்டுத் திரும்பி வந்து கொண்டிருந்தேன். ஒரு தோட்டத்தின் வழியாக வரும்போது என்னுடைய நாய் எதையோ மோப்பம் பிடிக்கத் தொடங்கியது. அதனால் சாவதானமாக நடந்து வந்து கொண்டிருந்தது. நான் சுற்று முற்றும் பார்த்தேன். குருவிக் குஞ்சு ஒன்று கீழே கிடந்தது. அப்போது அடித்த முரட்டுக் காற்றில் அந்தக் குஞ்சு மரத்திலிருந்து கீழே விழுந்திருக்க வேண்டும். நாதியற்ற நிலையில் அந்தக் குருவிக் குஞ்சு அப்படியே கிடந்தது.

என்னுடைய நாய் திறந்த வாயுடன் அந்தக் குருவிக் குஞ்சின் பக்கம் மெதுவாக நெருங்கிக் கொண்டிருந்தது. அப்பொழுது தொபுகடீர் என்று ஒரு குருவி மரத்திலிருந்து குதித்தது. உடனே தன் சிறிய சிறகை விரித்துக்கொண்டு நாயின் திறந்த வாயில் இரண்டு மூன்று முறை தன்னுடைய கூரிய அலகால் குத்தியது. பிறகு தன் குஞ்சைச் சின்னஞ்சிறிய தன்னுடைய சரீரத்துக்குள் மறைத்துப் பாதுகாத்துக் கொண்டது. ஒவ்வொரு கணமும் தாய்க் குருவி தன் குஞ்சுக்காகத் தன்னைத் தியாகம் செய்து கொண்டிருந்தது!

நாய், அந்தக் குருவியின் கண்களுக்கு எவ்வளவு பெரிய பூதமாகத் தோன்றியிருக்கும்! ஆனால் தன் உயிரை நினைத்து அது மரக்கிளையில் உட்கார்ந்து விடவில்லை. ஒரு சக்தி, அதன் மனோ சக்தியை விட பலம் பொருந்திய ஒரு சக்தி அதை உந்தித் தள்ளிவிட்டது.

என்னுடைய நாய் அந்தச் சக்திக்குத் தலைவணங்க வேண்டியதாகிவிட்டது. குருவியையும் குஞ்சையும் ஒன்றும் செய்யாமல் திரும்பிவிட்டது.

அந்தச் சிறு பறவையிடமும், அதன் பேரன்பிடமும் எனக்கு எல்லையற்ற பக்தி ஏற்பட்டது. அப்பொழுது நினைத்தேன்: "அன்பு மரணத்தையும் விட, மரண பயத்தையும்விட வலிமை பொருந்தியது. அன்பு ஒன்றுதான் வாழ்க்கையில் ஊன்றுகோல்; வழிகாட்டி" என்று.

—இவான் துர்கனேவ், புகழ்பெற்ற ருஷ்ய ஆசிரியர்.

வெற்றி பெற்ற விஜயபுரத்து மக்களின் சந்தோஷம் எல்லையை மீறிவிட்டது.

ஆனால் அச்சமயம் நடந்த ஒரு சம்பவம் அவர்களுடைய ஆனந்த வெறிக்கு ஒரு முற்றுப் புள்ளி வைத்து விட்டது.

அந்த மாபெரும் போரின் முடிவில் கிடைத்த வெற்றியைக் கண்ணால் பார்த்து அநுபவித்த வண்ணம் சத்துருமல்லன் பகைவன் ஒருவனின் கத்தியினால் மார்பில் காயத்துடன் கீழே சாய்ந்தான். அதைக் கண்ட மக்கள் அனைவரும் அவனைத் தாங்கிப் பிடித்துக் கொண்டு கண்ணீர் விட்டனர்.

சத்துருமல்லனின் மார்பிலிருந்து 'குபு குபு' வென்று ரத்தம் பெருக்கெடுத்து ஓடியது. அந்தக் காயத்தைக் கையால் அழுத்திக் கொண்டு, சத்துருமல்லன் மிகவும் சிரமத்துடன் எழுந்து உட்கார்ந்தான்.

"மகாஜனங்களே, என் மரணத்தைக் கண்டு கோழைகள் ஆகிவிடாதீர்கள். என் பிறந்த நாட்டின் சுதந்திரத்துக்காகக் கடைசி வரையில் போராடினேன். வெற்றி கிட்டிவிட்டது. இனி உங்களுக்கு மன்னன் வேண்டியதில்லை. மக்களுக்காக மக்களால் நடத்தப்படும் குடியரசை நம் நாட்டில் ஸ்தாபித்து விட்டு நான்... உங்களிடமிருந்து...சந்தோஷத்துடன்...விடை பெற்றுக் கொள்ளுகிறேன்...!" என்று சொல்லி விட்டுச் சத்துருமல்லன் மிகவும் சிரமத்தோடு பெருமூச்சு விட்டான். அவன் முகத்தில் புன்னகை தவழ்ந்தது. அவன் கண்கள் தாமாக மூடிக் கொண்டன.

சத்துரு மல்லன் உயிர்த் தியாகம் செய்த இடத்தில் இப்பொழுது வானளாவ ஒரு ஸ்தூபி நிற்கிறது.

"விஜயபுரத்தில் வீர சுதந்திரத்தையும் குடியரசையும் ஸ்தாபித்து உயிர்த் தியாகம் செய்து அமரரான சத்துருமல்லர் என்னும் வீர புருஷரின் ஞாபகார்த்தமாக இந்த ஸ்தூபி எழுப்பப் பட்டது!" என்று அதில் பொன் எழுத்தில் பொறிக்கப் பட்டிருந்தது.

* * *

பல வருஷங்களுக்குப் பிறகு, முன்பு மகாராஜாவுக்கு மூலிகை தந்த முனிவர் அந்த வழியாக வந்தார். வானளாவ நிற்கும் ஸ்தூபியைப் பார்த்தார். அங்கே நின்று கொண்டிருந்த ஒரு பெரியவரைப் பார்த்து, "ஐயா, இது என்ன ஸ்தூபி!" என்று கேட்டார்.

"சுவாமி, இது வீரர் சத்துரு மல்லனின் சமாதி. விஜயபுரத்து மக்களுக்குச் சுதந்திரத்தையும் குடியரசையும் தந்து உயிர்த் தியாகம் செய்த மகான் அவர். அதில் எழுதியிருக்கும் பொன் எழுத்துக்களைப் படித்துப் பாருங்கள்!" என்று சொன்னார் அந்தப் பெரியவர்.

முனிவர் அந்த வாசகங்களை மெய் சிலிர்க்கப் படித்துப் பார்த்து விட்டு மிகவும் வேகமாக நகரத்துக்குள் சென்றார். பிறகு நகரத்தைக் கடந்து கொஞ்சதூரம் சென்று அங்கிருந்த பழைய அரண்மனை ஒன்றில் நுழைந்து சபா மண்டபத்துக்குள் சென்றார். அங்கே பழைய மகாராஜா, மந்திரி, சேனாபதி யாவரும் உணர்ச்சியற்ற ஜடங்களாக இருந்தார்கள்.



குழந்தை:—ரொம்பக் களைப்பாக இருக்கு. இன்றைக்குப் பள்ளிக்கூடத்தில் இரண்டும் இரண்டும் எவ்வளவு என்பதைக் கற்றுக் கொடுத்தார்கள்.

முனிவருக்கு அவர்களை யெல்லாம் கண்டதும் மகா கோபம் வந்தது.

"மகா பாவி, மூழுச் சோம்பேறி! உன் நாட்டு மக்களை நலம் பெற ஆண்டு உன் சிரஞ்சீவித் தன்மையை நாட்டு நலனுக்குப் பயன்படுத்துவாய் என்று நினைத்து உனக்கு அந்த இணையற்ற, மூலிகையைத் தந்தேன். சோம்பேறியாகக் காலங்கழித்து வாழ்நாளைப் பாழ் பண்ணிவிட்டாயே!" என்று கோபாவேசத்துடன் கூறிக் கமண்டலத்திலிருந்து கொஞ்சம் நீரை யெடுத்து அவர்கள்மேல் தெளித்தார்.

அவ்வளவுதான். மகாராஜா, மந்திரி, சேனாபதி முதலியவர்கள் முகத்திலிருந்து அமிர்தத்தின் வேகம் இறங்கிவிட்டது.

மகாராஜாவுக்கு உடனே தம் குமாரன் சத்துருமல்லன் சண்டை செய்து சுதந்திரம் பெறப் போவதாகப் பல வருஷங்களுக்கு முன் சொல்லிச் சென்றது நினைவுக்கு வந்தது. தலை தெறிக்கும் வேகத்தில் நகரத்துக்குள் ஓடினார் மகாராஜா. மந்திரியும் சேனாபதியும் அவரைப் பின் தொடர்ந்தார்கள்.

அரண்மனைப் பிரதான வாயிலுக்கு அருகே வானளாவ நின்ற ஸ்தூபி அவர்கள் கவனத்தை இழுத்தது. மகனுடைய சமாதியைப் பார்த்தும் மகாராஜா மூர்ச்சையாகி விழுந்து விட்டார். சிறிது நேரங்கழித்து எழுந்தார். எத்தனையோ வருஷங்களுக்குப் பிறகு அவருக்குக் களைப்பும் பசியும் தாகமும் சோர்வும் உண்டாயின. மனிதத் தன்மையும் வந்தது.

"ஐயோ, இந்தப் பசியும், சோர்வும் களைப்பும் இல்லாமற் போய்விடவே எனக்கு நாட்டைப் பற்றிய சிந்தனையே இல்லாமற் போய் விட்டது. என் அருமை மகன் சத்துருமல்லன் இணையற்ற வீரன்! ஆம். அவன் அமரன்! அவன் தான் அமரன்! அவன் என்றும் இறவாத புகழுடம்புடன் விளங்குவான்!" என்று ஆவேசத்துடன் கூறினார் மகாராஜா.

பிறகு, குடியரசு நாட்டில் முடி தரித்த மன்னனுக்கு வேலையில்லை என்பதை விளக்கவும், தாம் முன்பு நாட்டைப் பகைவர்களுக்குக் காட்டிக் கொடுத்த தவறுக்குப் பரிகாரமாகவும் மகாராஜா விஜயபுரத்தை விட்டுத் தொலை தூரத்திலுள்ள வனப்பிரதேசத்துக்கு மனைவியுடன் சென்று விட்டார்.

# தோழர் பெட்கின்

இந்தப் பெட்கின், இருக்கிறானே ரொம்ப விசித்திரமான பேர்வழி. அவனை எனக்கு ரொம்ப நன்றாகத் தெரியும். அவன் ஒரு கட்டைப் பிரம்மசாரி. 17-ம் நெம்பர் வீட்டில்தான் இருக்கிறான். நான் வீட்டில் இருக்கிறேன் என்பதை விளம்பரப் படுத்தக் கூடிய பேர்வழியல்ல. ரொம்ப சாது. அடக்க ஒடுக்கமான மனுஷன். அவன் பாடுவதில்லை; வீணை, பிடில் ஒன்றும் வாசிப்பதில்லை; ரொம்பவும் நிதானஸ்தன். மரியாதை யுள்ளவன். அவன் ஒரு தொழிற்சாலையைச் சேர்ந்த ரஸாயனச் சாலையில் வேலை செய்கிறான் என்பதையும் இங்கே சொல்லி வைக்கிறேன்.

இப்போது நானும் பெட்கினும் சம்பந்தப் பட்ட ஒரு சம்பவத்தைச் சொல்லப் போகிறேன். ஆகா, சம்பவம் என்றால்தான் என்ன, அற்ப சொற்பமானது என்று நினைக்கிறீர்களா? இல்லவே இல்லை! அந்தச் சம்பவம் என்னைக் குடல் நடுங்கச் செய்து, கொன்றுவிடவே பார்த்தது. ஆமாம், அப்படி என்னை பயமும் பீதியும் கொள்ளச் செய்தது. அந்தப் பயத்தில் 'இனிமேல் யாருக்கும் நான் நீச்சல் சொல்லிக் கொடுக்கப் போவதில்லை' என்று தீர்மானம் செய்து கொண்டு விட்டேன்.

எனக்கொரு மாதிரி நரம்புத் தளர்ச்சி உண்டு. யாராகிலும் ஜலத்தில் மூழ்கிச் சாகிறார்கள் என்றால் என்னால் அந்தக் காட்சியைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது.

இப்படித்தான் அந்தச் சம்பவம் நிகழ்ந்தது. சென்ற வருஷம், விடுமுறை நாட்களைக் கழிக்கக் கடலோரப் பிரதேசத்துக்குச் சென்றிருந்தேன். முதல் நாள் நான் கடற்கரைக்கு (பீச்சுக்கு)ச் சென்றிருந்த போது, அங்கே பெட்கினைச் சந்தித்தேன். இந்த அயோக்யன் கடற்கரையில் சரல் கல்லாக இருந்த பகுதியில் படுத்துக் கிடந்தான். இவனைப் பார்த்ததுமே, இவன் தண்ணீர்ப் பக்கமே நெருங்கவில்லை என்பதைத் தெரிந்து கொண்டேன். ஆகவே நான், "ஏன் சமுத்திரத்தில் குளிக்கப் போகவில்லையா?" என்று இயல்பாக யாரையும் கேட்பது போல் கேட்டு வைத்தேன்.

"என்னால் முடியாது, போர்பிரி நிக்கோலியா விட்ச்! (இதுதான் என் பெயர்) சிறு வயதிலிருந்தே எனக்குத் தண்ணீர் என்றால் பயம். சமுத்திரத் தண்ணீரைக் கண்டு பயம் என்பதல்ல; சாதாரண ஆற்றைக் கண்டாலே பீதி! அப்படியானால் சமுத்திரத்தைக் கண்டால் எனக்கு எவ்வளவு பயம் இருக்கும் என்று சொல்லத் தேவை இல்லை என்று நினைக்கிறேன். ஆமாம், சமுத்திரத்தைப் பாருங்களேன்! அதற்கு ஒரு எல்லை, கரை ஒன்றுமே இல்லையே, அடேயப்பா! எவ்வளவு பெரிய தண்ணீர்ப் பரப்பு" என்று பீதி நிறைந்த குரலில் கூறினான். அவன் முகமும் பீதியால் வெளுத்து விட்டது.

அவன் கூறியவற்றைக் கேட்டு எனக்குச் சிரிப்புத்தான் வந்தது. ஒரு காளைப் பருவத்து இளைஞன், தண்ணீரைக் கண்டு பயப்படுவதாவது! அதுவும் இந்தக் காலத்தில்! விளையாட்டு, கேளிக்கை என்றால் எல்லாரும் பங்கெடுத்துக் கொள்ளும், ஏன் பெண்கள் முதற் கொண்டு பங்கெடுத்துக் கொள்ளும் இந்தக் காலத்தில்! ஆகவே, பெட்கினிடம் சொன்னேன்: "இது நன்றாயில்லை, பெண் பிள்ளைகள் உன்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். இந்தமாதிரி எல்லாம் இருக்கக் கூடாது. காம்ரேட் (தோழர்) பெட்கின், உன் வாழ்க்கையை அடியோடு மாற்றிக் கொண்டுதான் ஆகவேண்டும்."

இதைக் கேட்டதும் அவன் முகம் நாணத்தால் சிவந்தது. "தண்ணீரைக் கண்டு பயப்படுவது என் ரத்தத்தில் ஊறிப்போன விஷயமாயிற்றே! இந்தப் பிறவிக் குணத்தை எப்படி மாற்றிக் கொள்வது?" என்றான்.

"எப்படியாகிலும் நீ நீந்தக் கற்றுக் கொண்டுதான் ஆகவேண்டும். உனக்கு நீச்சல் கற்றுக் கொடுப்பதை என் சொந்தப் பொறுப்பாக எடுத்துக் கொண்டு கற்றுக் கொடுக்கிறேன். அப்படிக் கற்றுக் கொடுக்க வேண்டியது என் கடமையுமாகும்!" என்றேன்.

இப்படி நான் சொல்லிக் கொண்டிருக்கும் போதே அவன் உடம்பு, உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கிற்று.

"என்ன சொல்லுகிறீர்கள், என்ன? என்ன? எனக்கு நீச்சல் கற்றுக் கொடுக்கிறீர்களா? நான் எப்படிக் கற்றுக்கொள்ள முடியும் இந்த வயதில்?" என்று பிலாபித்தான்.

"எல்லாம் கற்றுக் கொள்ளலாம், உனக்கு நீச்சல் கற்றுக் கொடுப்பது என்

பொறுப்பு. நாளைக் காலையிலேயே ஆரம்பிப்போம்" என்று உற்சாகப்படுத்தினேன்.

நான் கூறியதற்கு அவன் பதில் சொல்லவே இல்லை. என்னதான் சொல்ல முடியும்? நான்தான் அவன் நீந்தக் கற்றுக்கொள்வது மிக அவசியம் என்பதை மட்டையடியாக அடித்து வலியுறுத்தி விட்டேனே!

★

மறுநாள் காலை நாங்கள் நீந்தத் தயாராக வந்தோம். ஆனால் பெட்கின் கரையை அடையும்போதே, தூக்கு மேடைக்குப் போவது போல் நடுங்கிக் கொண்டே வந்தான்.

"போ, முன்னால் போ! தண்ணீரில் போய் விழு! உம்!" என்று மிரட்டினேன்.

அவன் கண்களை இறுக மூடிக்கொண்டு தண்ணீரில் இறங்கினான். அப்போதுதான் அந்த வேடிக்கை ஆரம்பமாயிற்று. தண்ணீர் முழங்கால் மட்டும் வந்ததோ இல்லையோ, குற்றுயிரும் குலையுயிருமாகக் கரையை நோக்கி ஓடினான். பயல் கரையை விட்டு வரவே மாட்டான் என்று நினைத்து விட்டேன். ஒரு மணி நேரத்துக்கு மேல் அவனோடு மல்லுக் கொடுத்து, தண்ணீருக்கு இழுத்து வரும்பாடு, போதும் போதும் என்றாகி விட்டது. நான் வியர்த்து விறுவிறுத்துப் போய் விட்டேன். ஏன், என் எடையில் கூட ஐந்து பவுண்டு குறைந்திருக்கும் என்று நினைக்கிறேன்.

அவன் மணலில் விழுந்து, "போர்பிரி நிகோலியாவிச் (என் பெயர்!) தயவு செய்து என்னை விட்டுவிடேன். உனக்கு ரொம்பப் புண்ணியமுண்டு. நாய் வாலை நிமிர்த்த முடியுமா? அது போல்தான் நானும்! இந்த ஜன்மத்திலே நான் ஒரு 'நீச்சல்காரன்' ஆக முடியாது! எனக்கும் ஜலத்துக்கும் ஒத்து வராது! விட்டு விடுக்கனேன்" என்று என்னைக் கெஞ்சினான்.

ஆனால் நானா விடுபவன்?

"சரி. அப்படியானால் இன்றைக்கு இவ்வளவு போதும். நாளைக்கு இந்தப் பாடத்தைத் தொடருவோம். நாளைக்கு இந்த மாதிரி சாக்குப் போக்கெல்லாம் சொன்னால் விடமாட்டேன். உனக்கு நீந்தக் கற்றுக் கொடுத்துத்தான் மறு காரியம் பார்ப்பதாக இருக்கிறேன்" என்றேன்.

மறுநாள் வந்தபோதும் பெட்கின் 'பழைய சொக்கரே சொக்கன்' என்ற மாதிரிதான் இருந்தான். அவனை விட்டு அந்தத் தண்ணீர் பயம் நீங்கவில்லை. என்னைப் பரிதாபமாகப் பார்த்தான். நான் இந்த நிமிஷமோ, அடுத்த நிமிஷமோ அவனைக் கொலை செய்யத் தயாராக இருக்கும் கொலைகாரன் என்று நினைத்து என்னைக் கண்டு மருண்டான்.

"இன்றைக்கு வேண்டாமே!" என்று கெஞ்சினான்.

"அதெல்லாம் முடியாது! இன்று கற்றுக் கொடுத்தே தீருவேன். எங்கே தண்ணீரில் குதி, பார்ப்போம்!" என்றேன் கட்டளையிடும் குரலில்.

தண்ணீரில் இறங்கினான். நானும் அவனைப் பின் தொடர்ந்து சென்று, கையை எப்படித் தண்ணீரில் தட்டி, தண்ணீரை விலக்க வேண்டும், காலை எப்படி உதைக்க வேண்டும் என்றெல்லாம் செய்து காட்டினேன். ஒரு மணி நேரத்தில் கை தட்டக் கற்றுக் கொண்டு விட்டான். கால்கள்தான் அவனுக்குச் சரியாக வரவில்லை. கால்களைத் தனித் தனியாகத் தூக்கி தண்ணீரை






டாக்டர் :—பருமனைக் குறைத்துக் கொள்ள ஒரு ஆசாமி என்னிடம் வைத்தியத்துக்கு வந்து இருக்கிறார். அதனாலே, அக்காளும் தங்கையும் கொஞ்சம் அந்தப் பக்கம் வராமல் இருங்கள் !

உதைக்க வந்ததே தவிர இரண்டு கால்களையும் சேர்த்தாற்போல் உதைக்க வரவில்லை. நான் எவ்வளவோ முயற்சி எடுத்துச் சொல்லிக் கொடுக்கப் பார்த்தேன். என் முயற்சியினால், எனக்குத் தீவிரக் களைப்பு ஏற்பட்டு, இன்னும் ஒரு ஐந்து ராத்தல் எடை இழந்தேனே தவிரத் தோழர் பெட்கினுக்கு ஒரு பலனும் கிட்டவில்லை.

அதற்கும் மறுநாள் பெட்கினைச் சமுத்திரத்துக்கு அழைத்து வந்தேன். அன்று கடலில் அலைகள் அதிகமாக இருந்தன ! அதனால் நான் பெட்கினைப் பார்த்து, "தேவலை ; இன்றைக்கு உன்பாடு யோகந்தான். நம் நீச்சல் பாடம் இன்று கிடையாது " என்றேன்.

இந்தப் பெட்கின் ஒரு விசித்திரப் பேர்வழி என்றுதான் நான் அப்பவே சொன்னேனே ! அவன் இப்போது என்ன செய்தான், தெரியுமா ? தன் சட்டை யெல்லாம் களைந்துவிட்டு, நீந்தத் தயாராகி விட்டான். நான். ஆச்சரியத்தில் மூழ்கி அவனையே பார்த்துக் கொண்டிருந்தேன். அதற்குள் பெட்கின், "இப்பத்தான் எனக்கு ஒரு மாதிரி தண்ணீர் பயம் எல்லாம் நீங்கி யிருக்கிறது உங்கள் புண்ணியத்தில். இந்தச் சமயம் பார்த்து, ஒரு நாள் பழக்கம் விட்டுப் போனாலும் தவறிப் போய்விடும். அதனால் கரையோரமாக கொஞ்சநாழிகை நீந்தி விட்டு வருகிறேன்" என்று சொல்லிவிட்டுப் போனான்.

நான், "அலைகள் பயங்கரமாக அடிக்கிறது, ஜாக்கிரதை ! உன்னை அடித்துக் கொண்டு போனாலும் போய்விடும், உஷார் !" என்று எச்சரிக்கை செய்தேன்.

அடுத்த கணம் என் மூச்சு நின்று விடும் போல் ஆகி விட்டது. பெரிய புயல் அடிப்பதற்கான அறிகுறிகள் தோன்றலாயின. இந்நிலையில் ஜலத்தில் சென்ற பெட்கின் கண்ணுக்குப் புலப்பட வில்லை.

பத்து கஜ தூரத்தில் யாரோ அலைகளுடன் போராடுவதைப் பார்த்தேன். நான் உடனே என் ஆடைகளைக் களைந்து விட்டுத் தண்ணீரில் இறங்கி ஓடினேன். அவ்வளவுதான் ! ஒரு பெரிய அலை வந்து மோதி என்னைக் கரையில் கொண்டு வந்து சேர்த்து விட்டது. நான் கரையில் எழுந்து நின்று "ஒரு ஆள் முழுகிப் போய்க் கொண்டிருக்கிறான் ! ஆபத்து ! ஆபத்து !! உதவி ! உதவி !!" என்று கூவினேன். என் கூக்குரலைக் கேட்டுச் சுற்றுப்புற மிருந்த ஜனங்கள் எல்லாம் கூடி விட்டனர். அவர்களில் தைரியசாலிகளாக இருந்தவர் தண்ணீரில் நீந்திப் போய்ப் பார்த்தனர். எனக்கோ உயிரே போய் விடும் போலிருந்தது !

பிறகு கரையிலிருந்து ஐம்பது கஜ தூரத்தில் ஒரு ஆசாமி அந்தக் கொந்தளிக்கும் கடலில் நிம்மதியாக நீந்துவது தெரிந்தது. 'ஆகா ! எவ்வளவு அழகாக நீந்துகிறான் அந்த மனுஷன். புயலும், பயங்கர அலைகளும் அவனுக்கு ஒரு பொருட்டாகவே படவில்லையே !' என்று எண்ணினேன். ஆனால் அந்தக் கூட்டத்திலிருந்த ஒரு கப்பல் மாலுமி, தமது கையிலிருந்த தூரதிருஷ்டிக் கண்ணாடி மூலம் பார்த்து, "அந்த ஆசாமியைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். அவர் வேறு யாருமில்லை—பிரசித்தி பெற்ற நீச்சல்காரர் பெட்கின்தான். எத்தனையோ நீச்சல் போட்டிகளில் பரிசுகள் வாங்கி யிருக்கிறாரே, அதே பெட்கின்தான் ! ஏன், பெட்கினைப் பற்றிக் கேள்விப் பட்டதில்லையா ?" என்று என்னைப் பார்த்துக் கேட்டார்

உடனே, அங்கிருந்த அத்தனை பேரும் என்னைப் பார்த்துச் சிரித்தனர்.

★

பெட்கின் என்னை எப்படி ஏமாற்றி விட்டான் என்பதைப் பார்த்தீர்கள் அல்லவா!

என்னால் இந்த அவமானத்தைத் தாங்கவே முடியவில்லை. அதனால்தான் "இனி யாருக்கும் நீச்சல் கற்றுக் கொடுப்பதில்லை" என்று வீர சபதம் எடுத்துக் கொண்டேன்.

(ஒரு ருஷ்யக் கதை —ஸ். வி. ஸ்.)

# ஒரு டீஸ்பூனில் அடங்கியுள்ள சக்தி எவ்வளவு?

தினந்தோறும் வேறு ஆகாரத்திற்கு முன் ஒரே ஒரு டீஸ்பூன் "ஸெவன்ஸீஸ்" உட்கொண்டாலே அது உங்களுக்கு நல்ல தெம்பும் வீரியமும் அளிக்கிறது. நமது தேகத்திற்கு அவசியம் வேண்டியதும்—ஆனால் அநேகமாகக் கிடைக்காததும் ஆன—இயற்கையான கொழுப்புச் சத்தும், விடமின்களும் "ஸெவன் ஸீஸ்" இல் ததும்பி நிற்பதால் சில வாரங்களுக்குள்ளேயே தேகாரோக்கியத்திலும், ஆகிருதியிலும் நல்ல தேறுதல் காணப்படுகின்றது. இயற்கையாகவே இதில் உள்ள கொழுப்புச் சத்துக்கள் சக்தியையும், இயற்கை விடமின்கள் நோயை எதிர்க்கும் ஆற்றலையும் அளிக்கின்றன.

இன்றே "ஸெவன்ஸீஸ்" வாங்குங்கள். பிரதி தினமும் உங்களது வழக்கமான ஆகாரத்துடன் ஒரு அவசியமான உப உணவாக ஒரு டீஸ்பூன் அளவு உட்கொள்ளுங்கள். உங்களது குடும்பத்தினரையும் அது உட்கொள்ளுமாறு தூண்டுங்கள்.

## SevenSeaS

**PURE COD LIVER OIL**

பிரிட்டிஷ் காட்லிவர் ஆயில்ஸ் (ஹல் & கிரிம்ஸ்பி) லிமிடெட், ஹல், இங்கிலாந்து அவர்களாலேயே தயாரித்து அடக்கம் செய்யப்பட்டது

விநியோகஸ்தர்கள்:

கார் & கம்பெனி லிமிடெட்

பம்பாய் - கல்கத்தா - மதராஸ்

## மகத்தான தைப்பொங்கல் விற்பனை!

1. இரண்டு கடிகாரங்கள் ஆர்டருக்கு 6¼% கமிஷன் உண்டு.
2. மூன்று கடிகாரங்களுக்கும் அதற்கு மேற்கொண்டும் தரும் ஆர்டர்களுக்கு 10% கமிஷன் கொடுக்கப்படும்.

15 ஜூவல் கடிகாரங்கள் எல்லாம் 5 வருஷமும் மற்றவை 3 வருஷமும் உத்திரவாதம் கொண்டவை



சைஸ் 10½'''

| | | | |
|---|---|---|---|
| 401 | குரோம் கைக் கேஸ் | | 20 |
| 412 | செண்டர் செகண்டுடன் | | 28 |
| 404 | குரோம் | 7 ஜூவல் | 35 |
| 406 | ரோல்டு கோல்டு | 7 ஜூவல் | 40 |
| 407 | குரோம் | 15 ஜூவல் | 45 |
| 461 | வாட்டர் புரூப் | 15 ஜூவல் | 55 |



சைஸ் 7¾'''

| | | | |
|---|---|---|---|
| 479 | [illegible] | 5 ஜூவல் | 34 |
| 480 | ரோல்டு கோல்டு | 5 ஜூவல் | 39 |
| 482 | குரோம் | 15 ஜூவல் | 58 |
| 483 | ரோல்டு கோல்டு | 15 ஜூவல் | 61 |
| 485 | 30 மைக்ரோன் | 15 ஜூவல் | 70 |



சைஸ் 6¾'''

| | | | |
|---|---|---|---|
| 502 | குரோம் | 5 ஜூவல் | 34 |
| 503 | ரோல்டு கோல்டு | 5 ஜூவல் | 39 |
| 505 | குரோம் | 7 ஜூவல் | 45 |
| 511 | ப்ரோன்ஸ் | 15 ஜூவல் | 58 |
| 498A | 30 மைக்ரோன் | 15 ஜூவல் | 70 |



சைஸ் 6¾'''

| | | | |
|---|---|---|---|
| 434 | குரோம் | 5 ஜூவல் | 28 |
| 435 | ரோல்டு கோல்டு | 5 ஜூவல் | 31 |
| 440 | குரோம் | 15 ஜூவல் | 55 |
| 441 | ரோல்டு கோல்டு | 15 ஜூவல் | 58 |



சைஸ் 6¾'''

| | | | |
|---|---|---|---|
| 470A | குரோம் | 5 ஜூவல் | 30 |
| 471A | ரோல்டு கோல்டு | 5 ஜூவல் | 35 |
| 476 | குரோம் | 15 ஜூவல் | 45 |
| 477 | ரோல்டு கோல்டு | 15 ஜூவல் | 55 |



லேடீஸ் சைஸ் 5¾'''

| | | | |
|---|---|---|---|
| 532 | [illegible] | 5 ஜூவல் | 38 |
| 533 | [illegible] ரோல்டு கோல்டு | 5 ஜூவல் | 43 |
| 536 | ரோல்டு கோல்டு | 15 ஜூவல் | 65 |

[illegible] தயார் செய். விற்பனை [illegible] இவைகள்

CARONA WATCH Co. POST BOX NO. 6797 SEC.A.4. CALCUTTA-2

Regd. No. M. 4392